TAMIL'S PAGE
# தேடிப்பார் கொம்
Thedipaar.com


Thedipaaar App

DOWNLOAD OUR APPS




Anuthaapam.com


Pasi247.com



## இராணுவத்தினரால் காணாமல் ஆக்கப்பட்டவர்களுக்கு மரணச் சான்றிதழ்!

யாழ் நீதிமன்றில் அரச தரப்பு நாவற்குழியில் இலங்கை இராணுவத்தினரின் சுற்றிவளைப்பில் கைது செய்யப்பட்டு காணாமல் ஆக்கப்பட்டவர்களுக்கு மரணச் சான்றிதழ் வழங்கப்படலாம் என தெரிவிக்கப்படுகின்றது. தொடர்ச்சி 4-ம் பக்கம் பார்க்கவும்.....

## உலகின் மிக குறைந்த வயதுடைய புத்தக ஆசிரியராக மாறிய இலங்கை சிறுவன்.

இலங்கையை சேர்ந்த சிறுவன் உலகின் மிக இளம் வயது புத்தக ஆசிரியராக கூகுள் நிறுவனத்தினால் பெயரிடப்பட்டுள்ளார்.
தொடர்ச்சி 3-ம் பக்கம் பார்க்கவும்.....

## உயிரியல் விஞ்ஞான தொழில்நுட்பத்தில் கஞ்சா செடி வளர்ப்பு: அதிர்ச்சியில் பொலிஸார்!

இலங்கையில் உயிரியல் விஞ்ஞான தொழில்நுட்பத்தை பயன்படுத்தி கஞ்சா செடி வளர்த்தவர்களை பொலிஸார் கைது செய்துள்ளனர்.
தொடர்ச்சி 5-ம் பக்கம் பார்க்கவும்.....

## விமானி அபிநந்தன் நாளை விடுதலை செய்யப்படுவார்..!

பாகிஸ்தான் ராணுவத்தால் சிறை பிடிக்கப்பட்ட இந்திய விமானி அபிநந்தன் நாளை விடுவிக்கப்படுவதாக பாகிஸ்தான் பிரதமர் இம்ரான் கான் அறிவித்துள்ளார்.. தொடர்ச்சி 3-ம் பக்கம் பார்க்கவும்...

## கனேடிய சிறுமியின் தந்தை ராஜ்குமார் தன்னைத்தான் சுட்டுக் கொண்டார்!

இந்திய வம்சாவளி சிறுமியான ரியா ராஜ்குமாரைக் கொலை செய்ததாக அவளது தந்தையான ரூபேஷ் ராஜ்குமார் குண்டுக்காயங்களுடன் கைதாகி இருக்கும் நிலையில், அவர் தன்னைத்தானே சுட்டுக் கொண்டதாக தகவல்கள் வெளியாகியுள்ளன.
தொடர்ச்சி 4-ம் பக்கம் பார்க்கவும்...

## ரணில் சிறைக்கு செல்லும் நேரம் நெருங்கி விட்டதா?

அரசாங்கத்திற்கு எதிரான குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்படுவது கடந்த நான்கு ஆண்டுகளாக தாமதமாகி உள்ளது.
தொடர்ச்சி 5-ம் பக்கம் பார்க்கவும்...

## HOME FOR SALE



PLACE: MARSHCOURT DR
BEDROOMS: 3
WASHROOM: 3
PRICE: $665,000

KANNAN KANKESU 416-834-4200

## HOME FOR SALE



PLACE: JONAS MILLWAY ST
BEDROOMS: 3
WASHROOM: 4
PRICE: $789,000

KANNAN KANKESU 416-834-4200

## HOME FOR SALE



PLACE: CONACHER CRES
BEDROOMS: 4
WASHROOM: 3
PRICE: $850,000

KANNAN KANKESU 416-834-4200



## HOME FOR LEASE



PLACE: PURCELL SQ
BEDROOMS: 3
WASHROOM: 1
PRICE: $1,700

KANNAN KANKESU 416-834-4200

## HOME FOR LEASE



PLACE: SHERWOOD AVE
BEDROOMS: 4
WASHROOM: 0
PRICE: $1,800

KANNAN KANKESU 416-834-4200

## HOME FOR LEASE



PLACE: COYOTE CRES
BEDROOMS: 3
WASHROOM: 2
PRICE: $2,200

KANNAN KANKESU 416-834-4200

## HOME FOR LEASE



PLACE: SOLSTICE DR
BEDROOMS: 3
WASHROOM: 3
PRICE: $2,400

KANNAN KANKESU 416-834-4200



## CAR FOR SALE



NISSAN ROGUE
YEAR 2014 - 4 DOOR SUV
ONLY 43500KMS

MORE DETAILS KUMAR: 416 949 9393

சிறுவிளம்பரங்களுக்கு அழையுங்கள்
416-244-8818
416-635-0635

ஈழம் தமிழ் கலைஞர்கள் தேடல்

தேடல்களை சுலபமாக்கிட ஈழத்தமிழ் கலைஞர்களாகிய உங்கள் முகங்களுக்கோர் முகவரியை இத்தளத்தில் பதிவிடவும்

www.thedipaar.com




### எமதினிய வாசகர்களுக்கு..

இவ்வாண்டு(2019) முதல் தேடிப்பாரின் புதியதோர் வடிவமாக தேடிப்பார் செய்தித்தாள் வாரம் தோறும் உங்களை சந்திக்க வருகிறது. குறைகள் இருப்பின் சுட்டிக்காட்டி மன்னித்துக்கொள்ளுமாறு வேண்டுகிறோம். மற்றும் இங்கு பிரசுரமாகும் அனைத்து விளம்பரங்களுக்கும் விளம்பரதாரர்களே பொறுப்பு. தங்கள் ஆக்கங்களும் கட்டுரைகளும் இச்செய்திதாளில் பிரசுரிப்பதாயின் தயவு செய்து தொடர்புகொள்ளவும். மற்றும் புகைப்படங்கள் தந்துதவிய அனைத்து புகைப்படகார நண்பர்களுக்கும் ஆக்கங்கள் உருவாக்கி அனுப்பிய அன்பர்களுக்கும் எமது நன்றி.

416-244-8818
416-635-0635
info@thedipaar.com
www.thedipaar.com
2761 Markham Rd #C26
Scarborough ON
M1x 1M4

PROMOTE YOUR BUSINESS

## UPCOMING EVENTS IN CANADA




**Samyukta Wedding Show 2019**
Saturday, March 2, 2019
11 AM – 8 PM EST
Grand Cinnamon Banquet & Convention
3895 McNicoll Avenue, Toronto, Ontario M1X 0C1




**International Women's Day**
Friday, March 8, 2019
6 PM – 10:30 PM EST
Scarborough Convention Centre
20 Torham Place (Neilson & Finch), Toronto, Ontario M1X 0B3




**Nattiya Kalakshetra (Annual Program)**
Sunday, Mar 10, 2019
5 PM – 10 PM EDT
Chinese Cultural Centre of Greater Toronto
5183 Sheppard Ave E Toronto, Ontario M1B 5Z5




**TGTE Annual Convention & Awards Night 2019**
Sunday, April 14, 2019
5:30 PM – 10:30 PM EDT
Scarborough Convention Centre
20 Torham Place (Neilson & Finch), Toronto, Ontario M1X 0B3

## உலகின் மிக குறைந்த வயதுடைய புத்தக ஆசிரியராக மாறிய இலங்கை சிறுவன்.




1-ம் பக்க தொடச்சி......

வேயங்கொட தூய மரியா வித்தியாலயத்தில் 4ஆம் வகுப்பில் கல்வி கற்கும் இசுரு அருணோத நாகந்தல என்ற மாணவனே இவ்வாறு தெரிவு செய்யப்பட்டுள்ளார். அவரால் ஹொரகொல்ல தேசிய வனவிலங்கு காடு குறித்து எழுதப்பட்ட ஆங்கில கட்டுரை ஒன்றை கூகுள் நிறுவனம் இணையத்தில் வெளியிட்டுள்ளது. இதற்கு முன்னர் கூகுள் நிறுவனத்தினால் அமெரிக்க நாட்டை சேர்ந்த 9 வயது சிறுவனின் கட்டுரையே பதிவிடப்பட்டிருந்தது. இந்நிலையில் அந்த சாதனையை இலங்கையை சேர்ந்த 8 வயது சிறுவன் முறியடித்து உலகின் இளம் ஆசிரியராக பெயரிடப்பட்டுள்ளார். தனது மகனுக்கு கிடைத்த சர்வதேச அங்கிகாரம் குறித்து சிறுவனின் தந்தை மகிழ்ச்சி வெளியிட்டுள்ளார்.

## விமானி அபிநந்தன் நாளை விடுதலை செய்யப்படுவார்..!



1-ம் பக்க தொடச்சி......

நல்லெண்ண அடிப்படையில் போர்க் கைதியான இந்திய விமானப் படை கமாண்டர் அபிநந்தனை விடுவிப்பதாக பாகிஸ்தான் நாடாளுமன்றத்தின் கூட்டுக் குழுக் கூட்டத்தில் அந்நாட்டுப் பிரதமர் இம்ரான் கான் அறிவித்தார்.

அமைதிக்கான நல்லெண்ணத்தை வெளிப்படுத்தும் விதமாகவும், இந்தியா - பாகிஸ்தான் இடையே அமைதியை ஏற்படுத்தும் முயற்சியாகவும் இந்திய விமானப் படை விமானி அபிநந்தன் நாளை இந்தியாவுக்கு திருப்பி அனுப்பப்படுவார் என்று இம்ரான் கான் அறிவித்தார்.

இந்திய விமானப் படை விமானி விங் கமாண்டர் அபிநந்தனை பத்திரமாக ஒப்படைக்க வேண்டும் என்று இந்தியா தொடர்ந்து வலியுறுத்தி வந்த நிலையில், பாகிஸ்தான் பிரதமர் இம்ரான் கானின் இந்த அறிவிப்பு பலத்த வரவேற்பைப் பெற்றுள்ளது.

## ஒன்றாய்க் கூடிய அரசியல் எதிரிகள்.



சிறிலங்காவின் எதிரும் புதிருமான அரசியல் தலைவர்கள், நேற்று கொழும்பில் நடந்த நிகழ்வு ஒன்றில் ஒன்றாகப் பங்கேற்றிருந்தனர். அமைச்சர் ஜோன் அமரதுங்க நாடாளுமன்றத்தில் 40 ஆண்டுகளை நிறைவு செய்துள்ளதை முன்னிட்டு கொழும்பு பண்டாநாயக்க மாநாட்டு மண்டபத்தில் நேற்று மாலை நிகழ்வு ஒன்று இடம்பெற்றது. இந்த நிகழ்வில், சிறிலங்கா அதிபர் மைத்திரிபால சிறிசேன, பிரதமர் ரணில் விக்ரமசிங்க, முன்னாள் அதிபர்களான சந்திரிகா குமாரதுங்க, மகிந்த ராஜபக்ச ஆகியோர் பங்கேற்றனர். மைத்திரிபால சிறிசேனவும் சந்திரிகாவும் அண்மைக்காலமாக சந்தித்துக் கொள்வதை தவிர்த்து வருகின்றனர்.

அதுபோன்றே மகிந்த ராஜபக்சவை சந்திரிகா கடுமையாக விமர்சித்து வருகின்றனர்.இவர்கள் அனைவரும் ஒரே வரிசையில் நேற்றைய நிகழ்வில் அமர்ந்திருந்தனர். இந்த நிகழ்வில் உரையாற்றிய சிறிலங்கா அதிபர், 2015 அதிபர்ட தேர்தலில் ஜோன் அமரதுங்கவின் பங்களிப்பை தன்னால் மறக்க முடியாது என்று கூறினார். அத்துடன், மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளவர் என்பதால் தான், அவரால் நீண்ட காலம் அரசியலில் நிலைத்திருக்க முடிகிறது என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

## ஒரே குடும்பத்தை சேர்ந்த 7 குழந்தைகள் பலி - கனடாவில் நேரிட்ட பெரும் சோகம்..!




மாண்ட்ரியல் பகுதியில் உள்ள ஒரு வீட்டில் ஏற்பட்ட தீ விபத்தில் ஒரே குடும்பத்தை சேர்ந்த 7 குழந்தைகள் உயிரிழந்துள்ளனர். மாண்ட்ரியல் பகுதியில் நள்ளிரவில் ஒரு வீட்டில் திடீரென தீப்பிடித்தது. அப்போது அங்கு அயர்ந்து தூங்கி கொண்டிருந்தவர்கள் அலறினர்.

உடனே அக்கம் பக்கத்தினர் ஓடிச் சென்று பார்த்தனர். தீயணைப்பு படையினரும் விரைந்து வந்தனர். இந்த விபத்தில் அந்த வீட்டில் தங்கியிருந்த 7 குழந்தைகள் தீயில் கருகி பலியாகினர். ஒரு ஆணும், பெண்ணும் பலத்த காயத்துடன் வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர். தீ விபத்தில் உயிரிழந்த 7 குழந்தைகளும் ஒரே குடும்பத்தை சேர்ந்தவர்கள். அனைவரும் சிரியா அகதிகள் ஆவர்.

## ஐநாவை நோக்கி தொடரும் ஈருருளிப்பயணம்.



தமிழினப்படுகொலைக்கு நீதி கேட்டு அனைத்துலக சுயாதீன விசாரணையை வலியுறுத்தி ஒன்பதாம் நாளாக 26-02-2019 பாசெல் மாநகரத்தில் இருந்து ஆரம்பித்த ஈருருளிப்பயணம் சொலர்தூன் மாநகர சபை முதல்வரை சந்தித்து மனுக்கொடுத்து பிற்பகல் 17.00 மணிக்கு மக்களையும் சந்தித்து நிறைவுக்கு வந்தது.27-02-2019. காலை சொலர்தூன் நகரிலிருந்து ஆரம்பித்து பி.பகல் 16.00மணியளவில் சுவிஸ் பேர்ன் மாநகரை சென்றடையவுள்ளது.

## ஹரோ மேயருக்கு எதிராக லண்டன் தமிழர்கள் போர்க்கொடி!!



பிரித்தானியாவின் ஹரோ நகர மேயரை பதவி நீக்குமாறு புலம்பெயர் இலங்கைத் தமிழர்கள் கோரிக்கை விடுத்துள்ளதாக அந்நாட்டு ஊடகங்கள் தகவல் வெளியிட்டுள்ளன.இலங்கையை பூர்வீகமாக கொண்ட கரீமா மரிகார் ஹரோ நகர மேயராக செயற்பட்டு வருகிறார். இந்நிலையில் அவரை உடனடியாக பதவி விலகுமாறு கோரிக்கை விடுக்கப்பட்டுள்ளது. கடந்த வருடம் இலங்கைக்கு வருகை தந்திருந்த மேயர், உயர்மட்ட பாதுகாப்பு தரப்பினருடன் சந்திப்புக்களை நடத்தியிருந்தார். இந்த சந்திப்பிற்கு எதிர்ப்பு வெளியிட்டு ஹரோ நகரத்தில் வாழும் தமிழ் மக்கள் அவரை பதவி விலகுமாறு கூறி வருவதாக பிரித்தானிய ஊடகங்கள் தகவல் வெளியிட்டுள்ளன.

இலங்கையின் இராணுவ தளபதி மஹேஷ் சேனாநாயக்க, சர்ச்சைக்குரிய பிரிகேடியர் பிரியங்க பெர்ணாடோ உட்பட அதிகாரிகளுடன் கலந்துரையாடல் மேற்கொண்டார். இதன்போது இறுதிக்கட்ட போரினை நிறைவு செய்யும் நடவடிக்கையில் திறமைப்பட செயற்பட்ட இராணுவத்தினருக்கு பாராட்டும் மரியாதையும் செலுத்தியிருந்தார்.பாதுகாப்பு பிரிவு அதிகாரிகளுடன் கலந்துரையாடல் மேற்கொள்ளும் போது கரீமா மரிகார், ஹரோ நகர மேயருக்குரிய சீருடை அணிந்திருந்தமை சர்ச்சையை ஏற்படுத்தியுள்ளது. ஹரோ மேயராக இராணுவ கலந்துரையாடலில் ஈடுபட்டமைக்கே எதிர்ப்பு வெளியிடப்பட்டுள்ளது.

ஹரோ நகர மேயரின் செயற்பாட்டுக்கு எதிர்ப்பு தெரிவித்து, அந்தப் பகுதியில் இலங்கைத் தமிழர்கள் 49 பேரின் கையொப்பதுடன் மனு கையளிக்கப்பட்டுள்ளது. பிரித்தானியாவில் 28 வருடங்களாக வாழ்ந்து வரும் கரீமா மரிகார், கடந்த மே மாதம் ஹரோ நகர மேயராக தெரிவு செய்யப்பட்டார். 2010ஆம் ஆண்டு முதல் ஹரே நகர சபையை பிரதிநிதித்துவம் செய்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது.



## இராணுவத்தினரால் காணாமல் ஆக்கப்பட்டவர்களுக்கு மரணச் சான்றிதழ்!




1-ம் பக்க தொடர்ச்சி......

கொழும்பு ஊடகம் ஒன்று இது தொடர்பில் தகவல் வெளியிட்டுள்ளது. நாவற்குழியில் இராணுவத்தினரால் கைது செய்யப்பட்டு காணாமல் ஆக்கப்பட்டவர்களை நீதிமன்றில் முன்னிலைப்படுத்துமாறு அவர்களது உறவினர்கள் ஆட்கொணர்வு மனுத் தாக்கல் செய்துள்ள நிலையிலேயே அரச தரப்பு சட்டத்தரணி அவர்களுக்கு மரணச் சான்றிதழ் தரமுடியும் என பதிலளித்துள்ளார்.

1996ஆம் ஆண்டு நாவற்குழி இராணுவ முகாமின் கட்டளை அதிகாரியாகவிருந்த லெப். துமிந்த கெப்பிட்டிவலன்ன தலைமையிலான படையினர், கைது செய்து கொண்டு சென்ற 24 இளைஞர்கள் பின்னர் காணாமல் ஆக்கப்பட்டனர். அவர்களில் 3 இளைஞர்கள் காணாமல் ஆக்கப்பட்டமை தொடர்பாக, அவர்களது பெற்றோரால் தாக்கல் செய்யப்பட்ட ஆட்கொணர்வு மனுக்கள் நேற்று யாழ்ப்பாணம் மேல் நீதிமன்ற நீதிபதி அன்னலிங்கம் பிரேம்சங்கர் முன்னிலையில் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

இந்த வழக்கில், முதலாம் பிரதிவாதியான இராணுவ அதிகாரி லெப். துமிந்த கெப்பிட்டிவலன்ன மற்றும் மூன்றாம் பிரதிவாதியான சட்ட மா அதிபர் ஆகியோர் சார்பில், பிரதி சொலிசிற்றர் ஜெனரல் சைத்ய குணசேகர முன்னிலையானார்.காணாமல் ஆக்கப்பட்டோர் சார்பில் என்ன நிவாரணத்தை எதிர்பார்க்கிறீர்கள் என்று, மனுதாரர்களிடம் நீதிமன்றம் கேள்வி எழுப்பியது. அதற்கு, மனுதாரர்கள் தரப்பு சட்டவாளர் கு.குருபரன், நாவற்குழி இராணுவ முகாம் அதிகாரிகளால் கைது செய்யப்பட்டு காணாமல் ஆக்கப்பட்டோர் உயிருடன் இருக்கிறார்களா, அவர்கள் எங்கு இருக்கிறார்களா? அல்லது அவர்களுக்கு என்ன நடந்தது? என்பதை சட்ட மா அதிபர் உள்ளிட்ட பிரதிவாதிகள் வெளிப்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

ஆனால், அதற்குப் பதிலளிக்காத பிரதிவாதிகள் தரப்பு சட்டவாளரான பிரதி சொலிசிற்றர் ஜெனரல், சைத்ய குணசேகர, காணாமல் ஆக்கப்பட்டோர் சார்பில் இறப்புச் சான்றிதழுக்கு விண்ணப்பித்தால் அதனை வழங்கத் தயார் என்று கூறினார். அவரது பதிலை நிராகரித்த மனுதாரர்களின் சட்டத்தரணி, கு.குருபரன், இராணுவத்தினரால் கைது செய்யப்பட்டவர்களுக்கு என்ன நடந்தது என்பதை வெளிப்படுத்த வேண்டும் என்பதே எமது கோரிக்கை என தெரிவித்தார். இருதரப்பு வாதங்களையும் ஆராய்ந்த நீதிமன்றம், இந்த வழக்கை எதிர்வரும் 18ஆம் திகதி ஒத்திவைத்துள்ளது.

## கனேடிய சிறுமியின் தந்தை ராஜ்குமார் தன்னைத்தான் சுட்டுக் கொண்டார்!



1-ம் பக்க தொடர்ச்சி......

தனது தாயுடன் வாழ்ந்து வந்த ரியா ராஜ்குமார் (11) தனது பிறந்த நாளைக் கொண்டாடுவதற்காக தனது தந்தையை சந்திக்க சென்ற நிலையில், வெகு நேரமாகியும் அவள் வீடு திரும்பாததால் கவலையுற்ற அவளது தாயார் பொலிசாருக்கு தகவல் அளித்தார். தனது மனைவியை விட்டு பிரிந்து வாழ்ந்த ரூபேஷ், ஏற்கனவே மனைவியுடனான வாக்குவாதத்தின்போது தனது மகளைக் கொன்றுவிட்டு, தானும் தற்கொலை செய்து கொள்வதாக மிரட்டியுள்ளார். எனவே அப்படி எதுவும் நடந்துவிடக்கூடாது என்பதற்காக பொலிசாரை தொடர்பு கொண்டார் ரியாவின் தாய். உடனடியாக பொலிசார் பொது மக்களின் தொலைபேசிகளுக்கு இப்படி ஒரு நபரைக் குறித்து எச்சரிக்கும் ஆம்பர் அலர்ட் என்னும் எச்சரிப்பை அளித்து, ரூபேஷ் மற்றும் அவரது வாகனம் குறித்த தகவல்களை அளித்து, யாராவது அவரையோ அவரது வாகனத்தையோ கண்டால் தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொண்டனர். அதன் அடிப்படையில் ரூபேஷின் காரைக் கண்ட ஒரு நபர் பொலிசாருக்கு தகவலளிக்க, Orillia என்ற இடத்தில் பொலிசார் ரூபேஷைக் கைது செய்தனர். அதே நேரத்தில் ரூபேஷின் வீட்டுக்குள் நுழைந்த பொலிசார் அங்கு ரியா உயிரிழந்து கிடப்பதைக் கண்டனர். ரூபேஷைக் கைது செய்யும்போது, அவருக்கு ஏதோ பிரச்சினை இருப்பதை உணர்ந்த பொலிசார், அவரை சோதனையிட்ட போது அவர் உடலில் துப்பாக்கிக் குண்டு பாய்ந்திருப்பதைக் கண்டனர். உடனடியாக மருத்துவமனைக்கு கொண்டு செல்லப்பட்ட ரூபேஷ், அபாயகரமான நிலையில் தீவிர சிகிச்சைப் பிரிவில் அனுமதிக்கப்பட்டார். ரூபேஷ் தன்னைத்தானே சுட்டுக் கொண்டதாக தெரியவந்துள்ளதால் அவர் ஏற்கனவே தனது மனைவியை மிரட்டியது போலவே மகளைக் கொன்று விட்டு தன்னையும் சுட்டுக்கொண்டதாக கருதப்படுகிறது.

மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ள ரூபேஷ் இன்னும் தீவிர மருத்துவ கண்காணிப்பில் இருப்பதாகவும், தாங்கள் இன்னும் அவரிடம் விசாரணை மேற்கோள்ளவில்லை என்றும் தெரிவித்துள்ளனர். எனவே மருத்துவமனையில் தீவிர பொலிஸ் கண்காணிப்பில் இருக்கும் ரூபேஷ் தற்போதைக்கு நீதிமன்றத்தில் ஆஜர் படுத்தப்படமாட்டார் என்றும் அவர் நலம் பெற்ற பிறகே நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தப்படுவார் என்றும் பொலிசார் தெரிவித்துள்ளனர். அவர் மீது கொலைக்குற்றம் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்நிலையில் ரியாவின் உடல் புதன்கிழமை காலை நல்லடக்கம் செய்யப்பட உள்ளதாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

## உலகின் தலைசிறந்த பத்து ஆசிரியர்களில் ஒருவராக இடம்பிடித்த ஈழத்து தமிழ் பெண்..!



உலகின் தலைசிறந்த பத்து ஆசிரியர்களுள் ஒருவராக அவுஸ்திரேலியாவில் வசிக்கும் இலங்கை தமிழ் பெண்ணான யசோதை செல்வக்குமாரன் தெரிவாகியுள்ளமை மிகவும் உன்னதமானதொரு விடயமாக பார்க்கப்படுகின்றது. முன்னதாக உலகின் தலைசிறந்த ஐம்பது ஆசிரியர்கள் என்ற நிலையினை எட்டிய இவர், தற்பொழுது பத்து ஆசிரியர்களுள் ஒருவராக முன்னேறி சாதனை படைத்துள்ளார். இந்த வெற்றியானது அவுஸ்திரேலியாவுக்கு கிடைத்த மிகப்பெரிய கௌரவமாக கருதப்படுவதாக அந்த நாட்டு தொலைக்காட்சிகள் உள்ளிட்ட ஊடகங்கள் பலவும் இந்த ஈழத்தமிழச்சியினை வெகுவாக பாராடுகின்றது. உலகின் தலை சிறந்த ஆசிரியர்களில் முதலாவதாக ஐம்பது இடங்களுக்குள்ளும், தற்பொழுது பத்து இடங்களுக்குள்ளும் யசோதை முன்னேறியமை அளப்பெரும் சாதனை என அந்த ஊடகங்கள் புகழ் மாலை பொழிகின்றது.

பத்து இறுதி தேர்வாளர்களில் முதலாவது நிலையினை பெறும் போது ஒரு மில்லியன் அமெரிக்க டொலர்களை இவர் பரிசாக பெறுவதற்கு வாய்ப்புண்டு, எதிர்வரும் மார்ச் மாதம் 24ஆம் நாளன்று இந்த சாதனைக்கான பரிசுத்தொகை முதலாம் இடத்தினை பெறுபவருக்கு டுபாயில் வைத்து வழங்கப்படும். இந்த வாய்ப்பும் இவருக்கே பெரும்பாலும் கிடைக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. யசோதை அவுஸ்திரேலியாவின் மேற்கு சிட்னியில் உள்ள ரூட்டி ஹில் உயர்நிலைக் கல்லூரியில் ( Rooty Hill High School) வரலாறு, சமூகமும் கலாச்சாரமும், புவியியல் பாடங்களை கற்பிக்கும் ஓர் ஆசிரியர்.

இக் கல்லூரியில் கல்விகற்கும் 80வீதமான மாணவர்கள் அகதிகளாகவும், புலம்பெயர்வாளர்களாகவுமே உள்ளனர், அகதிகள், புலம்பெயர்வாளர்கள் மற்றும் ஆஸ்திரேலிய பழங்குடியினரின் சமத்துவமான கல்விக்காக அவர் தினமும் அங்கு போராடுவதுடன் கல்வி தொடர்பாக தனது தனிப்பட்ட செயற்திட்டங்களை போதிப்பதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

குறிப்பாக ஆஸ்திரேலிய பழங்குடியினர் கல்வியின் மீது மிகவும் நாட்டம் குறைந்தவர்கள், மிகவும் பின்னிலையிலுள்ள ஓர் சமூகம் இவருடைய. கல்லூரியில் 65 பழங்குடி மாணவர்கள் கல்வியை விரும்பிக் கற்பதற்கு யசோதை காரணமாக இருந்ததுடன் அங்குள்ள பழங்குடி இன மக்களிடையே கல்வி குறித்த தேவையினை உணரவைத்து பல்கலைக்கழகம் செல்லவேண்டும் என்ற ஆசையினை ஊட்டியதாக அவர்மீது அவுஸ்திரேலிய ஊடகங்கள் புகழ்மாலை சூட்டியுள்ளன.

179 நாடுகளிலிருந்து கிடைக்கப்பெற்ற பத்தாயிரத்துக்கும் அதிகமான பரிந்துரைகலிலிருந்தே இந்த பத்து பேரும் தெரிவுசெய்யப்பட்டுள்ளனர். 2010 ல் உருவாக்கப்பட்ட இலண்டனை தலைமையைக்கமாகக் கொண்ட The Varkey Foundation எனும் அமைப்பே இந்த நிகழ்வினை வருடா வருடம் நடாத்திவருகின்றது.எதிர்வரும் மார்ச் 24 ம் திகதியில் அறிவிக்கப்படும் முதல் பரிசினையும் இவரே பெற்று தன் குடும்பத்திற்கும், தமிழ் சமூகத்திற்கும், ஆஸ்திரேலிய நாட்டிற்கும் மேலும் பெருமை சேர்க்க வேண்டுமென நாமும் வாழ்த்துவோம்.

## உயிரியல் விஞ்ஞான தொழில்நுட்பத்தில் கஞ்சா செடி வளர்ப்பு: அதிர்ச்சியில் பொலிஸார்!



1-ம் பக்க தொடர்ச்சி......
நாத்தாண்டிய, பனத்கொட பிரதேசத்திலேயே குறித்த கைது சம்பவம் இடம்பெற்றுள்ளது.3 - 4 அங்குல செடி மற்றும் 4 - 4 அடி உயரமான 1100 கஞ்சா செடிகள் குறித்த பிரதேசத்தில் பயிரிடப்பட்டுள்ளதாகவும், இச்செடிகளை வளர்ப்பதற்கு மிக உயர்ந்த விஞ்ஞான தொழிநுட்ப அறிவு பயப்படுத்தப்பட்டுள்ளதாகவும் நாத்தாண்டிய பொலிஸார் குறிப்பிட்டுள்ளனர்.

அத்துடன் குறித்த கஞ்சா செடிகள் மரக்கறிப் பயிர்களுடன் சேர்த்துப் பயிரிடப்பட்டுள்ளதால் இலகுவில் கண்டு பிடிக்க முடியாமலிருந்ததாக பொரிஸார் மேலும் குறிப்பிட்டுள்ளனர்.

## ரணில் சிறைக்கு செல்லும் நேரம் நெருங்கி விட்டதா?



1-ம் பக்க தொடர்ச்சி......
ஐக்கிய தேசியக் கட்சியின் தற்போதைய அரசாங்கம் ஆட்சியில் இருக்கும் வரை இலங்கை மத்திய வங்கியின் பிணை முறி மோசடியுடன் சம்பந்தப்பட்ட குற்றவாளிகள் மறைந்திருக்க முடியும் என ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியின் நாடாளுமன்ற உறுப்பினர் வாசுதேவ நாணயக்கார தெரிவித்துள்ளார். கம்பஹாவில் நேற்று செய்தியாளர்களிடம் பேசும் போதே அவர் இதனை கூறியுள்ளார்.

அரசாங்கத்திற்கு எதிரான குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்படுவது கடந்த நான்கு ஆண்டுகளாக தாமதமாகி உள்ளது. அரசாங்கத்தின் அதிகாரம் பலம் காரணமாக அரசாங்கத்திற்கு எதிரான நடவடிக்கை முடங்கியுள்ளது.

தற்போதைய அரசாங்கத்தின் ஆட்சி முடிவுக்கு வரும் போது, பிணை முறி மோசடியின் உண்மையை மக்கள் அறிந்துக்கொள்ள முடியும்.தன்னை கைது செய்ய முடியாது என்பதாலேயே ரணில் விக்ரமசிங்க பல வருடங்களாக எதனையும் செய்யாமல் இருக்கின்றார்.

ரணில் விக்ரமசிங்கவே இந்த மோசடியின் முதலாவது குற்றவாளி. இதனை தெரிவித்து, இலஞ்ச, ஆணைக்குழுவிடம் முறைப்பாட்டு மனுவும் தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

ஆட்சி அதிகாரம் கைவிட்டு போகும் நாளில் ரணில் விக்ரசிங்க சிறையில் இருக்க நேரிடும் எனவும் வாசுதேவ நாணயக்கார குறிப்பிட்டுள்ளார்.

## ஒருத்தி திரைப்பட விமர்னம்.......




கனடாத் தமிழர்களுக்கு மிகவும் பரிச்சயமானவரும், உலகத்தமிழர்கள் பலருக்கு அறிமுகமானவருமான P.S. சுதாகரன் அவர்களின் கன்னிப் படைப்பான ஒருத்தி முழுநீளத் திரைப்படம், அப்படக் குழுவினரால் பிரத்தியேக காட்சிப்படுத்தலை கடந்த 16ம் திகதி YORK திரையரங்கில் அரங்கேற்றியது. அழைப்பை ஏற்று, இரண்டு திரைகளில் ஒரே நேரத்தில், 1:00 மணிக் காட்சியானது, ஆர்ப்பாட்டமும் இல்லாமல், அமைதியும் இல்லாமல் அளவான பார்வையாளர்களுடன் காட்சிப்படுத்தப்பட்டது. சுதாகரன், ஒரு பன்திறமையாளன். நீண்ட காலமாக ஊடகத்துறையில், வானொலி, தொலைக்காட்சியிலும், திரைமுகமாகவும் தன் திறமையை நிரூபித்த கலைஞன். ஒருத்தி படமானது அவரின் இயக்கத்தில் வரும் முதல் படைப்பு. நிறை, குறைகளைத் தாண்டி, இப் பெருமுயற்சிக்கும் வருங்கால முனைவுகளுக்கும் வாழ்த்துகளும் மகிழ்வும்.

படத்திற்குள் செல்வோம்...
படத்தின் இறுதி 10 நிமிடங்கள் TEKNOMEDIA எனும் நிறுவனத்திற்கான விளம்பரமாகவே படம் அமைந்திருந்தது.அத்துடன் அந்த நிறுவனத்தின் முகாமையாளருக்கு நடந்த கதை இது என்பது போன்ற ஒரு தோற்றப்பாட்டை வசனங்கள் உறுதிப்படுத்தின. அப்படி இது ஒரு நிஜமாக நடந்த கதையெனில் விமர்சனம் செய்வதில் அர்த்தமில்லை. அப்படி இல்லாவிடில், இதோ படம் பற்றி... ஈழ சினிமாவானது, கடந்த பல வருடங்களாக ஈழத்திலும், புலம்பெயர் தேசத்திலும் பல பரீட்சார்த்த முயற்சிகள் செய்து வருகின்றது. வியாபார ரீதியாகவோ அல்லது தகமைப்பட்டம் பெறுவதற்கான முயற்சியாகவோ பல படங்கள் வெளிவந்து கொண்டுள்ளன. ஒருத்தி படமானது, இரண்டு பக்கங்களுக்கும் செல்ல எத்தனித்த ஒரு முயற்சியாகவே புரிகின்றது.ஈழத்தில் இருந்து 2000 ம் ஆண்டு, பாதுகாப்பிற்காக கனடா வரும் ஒரு குடும்பம் சந்திக்கும் நிகழ்வுகளை கதையாக பின்னியிருந்தனர்.அங்கிருந்து இங்கு வரும் ஒரு தாய்,தந்தை, மகள், மகன் இங்குள்ள சூழலுக்குள் சிக்குப்பட்டு கடக்கும் பரிதாபத்தை சொல்ல முனைந்துள்ளார்கள்.

கதைப்படி, அங்கிருந்து இங்கு வரும் குடும்பத்தினர், வந்த உடனேயே சகல வசதிகளும் அமைந்த புதிய வீடொன்றில் குடியேறுவது யதார்த்தத்துடன் ஒட்டவில்லை. மகன் இங்குள்ள சூழலுக்கு உடனடியாக மாறுவதும், வேற்றினப் பெண்ணை காதலிப்பதும், பிழையான நட்புகளுடன் வழிமாறுவதும் போன்றவை இங்கு நடக்காமல் இல்லை, அனாலும் அவ்வளவு சீக்கிரமாக நடப்பது கொஞ்சம் கற்பனைச் சாயம் கொண்டுள்ளதாகவே உள்ளது. ஒருத்தி யாக வரும் அரசியை ஒரு பணக்கார வீட்டுப் பையன் விடாப்பிடியாய் காதலிப்பதும், பின்னர் அரசி ஒரு வாகன விபத்தில் காலில் அடிபட்டவுடன் விட்டுச் செல்வதும், அரசி ஈழம் சென்று, ஏற்கனவே திருமணம் ஆன ஒருவரை மணப்பதும், கற்பமாவதும், பின்னர் அவன் ஏற்கனவே திருமணமாகி மனைவி பிள்ளைகளுடன் வாழ்வதை கண்டு பிடிப்பதும், அதன் பின்னர் மீண்டும் கனடா வந்து ஒரு பெரிய வியாபார நிர்வாகியாக உச்சம் தொடுவதும், இறுதியாக அவருக்கு ஆங்காங்கே உறுதுணையாக இருந்த ஒருவருடன் இணைந்து நடந்து செல்வதுமே படம். இந்தப் படம் ஆரம்பிக்கும் போது இது ஒரு வரலாற்றுப் பதிவென்று சொல்லி ஆரம்பிக்கின்றார்கள். இப்படியாய் எம்மவரின் வரலாறுகளை பதிவதற்கு இலங்கை அரசாங்கம் நிச்சயம் விருது தந்து கொண்டாடும்.

ஒரு இனத்தின் வரலாற்றுப் பதிவு இப்படியே கொஞ்சம் கொஞ்சமாய் சிதைவதற்கு கலைமூலம் வலுச்சேர்த்ததில் இயக்குனர் வெற்றியடைந்தேயுள்ளார். தமிழர்கள் உலகெங்கும் எங்கோ உயரங்களில் கோலோச்சும் இந்தக் காலத்தில், ஊரில் உள்ளவர்கள் வெளிநாடு செல்ல தங்கள் திருமணங்களை மறைத்து வெளிநாட்டில் வசிக்கும் எம்மினப் பெண்களை மணக்கின்றார்கள் என்பதும், அங்கிருந்து இங்கு வரும் ஆண்பிள்ளைகள் தறிகெட்டுப் போகின்றார்கள் என்பதும் சொல்வதற்கு எடுக்கப்பட்ட படம் தான் இது. படப்பிடிப்பும், காட்சியமைப்பும் சின்ன சின்ன பழைய நினைவுகளை நினைக்க வைக்க முயற்சி செய்திருந்தும் தோல்வியே கண்டுள்ளது. இசை ஒரு கட்டத்திலும் ஒன்றி நிற்காமல் தன்பாட்டிற்கு தடுமாறுகின்றது. பேசும்போதும் கூட தேவையற்ற முழக்கமான இசைக்கோர்வை.

ஒலிக்கோர்வையின் போது சில காட்சிகள் அந்த இடத்திலேயே ஒலிச்சேர்வு செய்திருப்பது எரிச்சலை ஏற்படுத்துகின்றது. உதாரணமாக பாரிஸ் கலைஞர் இந்திரன் அண்ணன் வரும் கட்டத்தை சொல்லலாம். அனைத்தையும் தாண்டி, இது ஒரு ஆவணப்படமா அல்லது விளம்பரப்படமா என்றே தெரியவில்லை. நடிகர்கள் அனுபவத்தை பாவித்துள்ளனர், மிகமுக்கியமாக மதிவாசன் மற்றும் கோதை அமுதன் ஆகியோர் கைதேர்ந்த நடிப்பு, ஆனாலும் அவர்கள் இயக்குனர் சொல்வதை செய்து சென்றுள்ளதால் பெரும் பாதிப்பை ஒன்றும் ஏற்படுத்தவில்லை. மிகமுக்கியமாக, தொலைக்காட்சி நாடகங்களிலும் விட இழுவையாக படம் நகர்ந்தது.

கிட்டத்தட்ட 10-15 வருடங்கள் கொண்ட கதையில் ஒருத்தி அப்படியே வந்து போகின்றாள். அடுத்த படைப்பில் இவற்றை கவனத்தில் கொள்வார்கள் என்ற நம்பிக்கை உண்டு. ஈழதேசத்தின் மொழியை திரையில் கொடுத்த குழுவிற்கு பாராட்டுகள். (விமர்சனங்கள் படைப்பாளியை நெறிப்படுத்தும்)

நன்றி

-பாமரன

# Team Pathfinder

வீடு வாங்க
விற்க

## ALL YOUR REAL ESTATE NEEDS

Residential/ Commercial / Investments / Land





















**Thana Suseendra**
Sales Rep
416-893-4376

**Kishok Suseendra**
Sales Rep
647-864-8330



thanarealestate@gmail.com




CENTURY 21 Innovative Realty Inc.,
Brokerage* *Independently Owned And Operated

Bus: 416-298-8383 | Fax: 416-298-8303
3-2250 Markham Rd, Toronto, ON M1B 2W4

## ஏதிலி நான் #2



புலத்திற்கும் புலம்பெயருக்கும் இடையிலான நெருடல்களும், புரிந்துணர்வின்மையும் இந்த பத்தாண்டுகளில் ஒருதுளியாவது மாறியுள்ளதா என்றால், அது கேள்விக்குறியாகவே உள்ளது. 2009 க்கு முன்னர் ஒரேயொரு மனிதனின் கட்டுக்கோப்பான நெறிப்படுத்தலில் ஈழமக்கள், அங்கும் இங்கும் ஒரே கோட்டில் தான் பயணித்தார்கள். முள்ளிவாய்க்கால் மௌனிப்பின் பின்னர் பல முரண்பாடுகளை காணக்கூடியதாக உள்ளது. போராட்ட காலங்களில் நாட்டைவிட்டு ஓடிவிட்டு இப்போ வந்து நாட்டாமை பண்ணாதீர்கள். நாம் இங்கு பல வலிகளை கடந்தவர்கள். எங்களுக்கு கதை சொல்லாதீர்கள் என்பது அங்குள்ள சிலரின் கூற்றாக உள்ளது. அதில் நிஜாயம் இருப்பதாக தோன்றினும், அந்த குரல்கள் அனேகமாக அங்கு நடந்த போராட்டத்தில் வலிகளை கடக்காத சிலர் மூலமாக வருகின்றது என்பதே வியப்பை கொடுக்கின்றது. போராட்டத்தில் தங்களை இணைத்தவர்களுக்கு நன்றாய் தெரியும் புலம்பெயர் உறவுகளின் பங்களிப்பும், போராட்டம் புலம்பெயர் உறவுகள் இல்லாமல் சாத்தியப்படவில்லை என்ற உண்மையும்.

அதே நேரம், புலம்பெயர் தேசத்தவர்களின் கோபமானது, நாம் இங்கு குளிரிலும் பனியிலும் வேலைக்கு சென்று, அன்னியனிடம் கைகட்டி தலைகுனிந்து, கடினமான வேலைகள் செய்து போராட்டத்திற்கும் மக்களுக்கும் இவ்வளவு செய்தும், இந்த சனத்திற்கு நன்றிக்கடன் இல்லையே. நன்றி சொல்லாவிடினும் பரவாயில்லை மாறாக, குற்றம் காணுதலும், எடுத்தெறிந்து பேசுவதும் அவர்கள் வாடிக்கையாகி விட்டது என்னும் குறைபாடு உண்டு.இவர்கள் கூற்றும் நிஜாயமானதாக தான் உள்ளது. இருப்பினும், இடது கை கொடுப்பது வலது கைக்கு தெரியாத வண்ணம் ஈழதேசத்தை நோக்கி கொடை செய்பவர்கள் பலர் இந்த கோபக்காரர்களுக்குள் இருக்கின்றார்களா என்பதும் கேள்விக்குறியே. புலத்தில் உள்ளோர்களில் ஒரு பகுதியினரை விட ( தொழில் வைத்திருப்பவர்கள், என்ன வேலை என்றாலும் செய்ய தயங்காதவர்கள்) மிகுதியானவர்கள் அனைவருமேபுலம்பெயர் உதவிகளை நாடும் நிலையை தான நாடு தந்துள்ளது என்பதே உண்மை. ஆக, அன்றுபோல் இன்றும் புலம்பெயர் சக்திகளின் பாரிய ஒத்துழைப்பு ஈழத்திற்கு தேவையாய் உள்ளது. அப்படியான தேவைகள் அன்றாடம் நடந்த வண்ணம் உள்ளது என்பதை நாம் சமூகவலைத் தளங்களில் அன்றாடம் பார்க்கக்கூடியதாக உள்ளது. வீடு, வசதிகள்இல்லாதோருக்கு உதவி, மேற்படிப்புக்கு மாணவர்களுக்கு உதவி, துவிச்சக்கரவண்டிகள், தையல் இயந்திரங்கள் வழங்கல், மாதாந்த உதவித்தொகை வழங்கல் போன்ற பலவிதமான வழங்கல்களை வெளிநாட்டு உறவுகளின் பங்களிப்போடு பல குழுமங்கள் செய்து கொண்டிருக்கின்றார்கள். அப்படியாயின், எப்படி இந்த புரிந்துணர்வு மட்டும் இன்னும் ஈழத்தில் வாழ்பவர்களுக்கும், வெளிநாட்டில் வாழ்பவர்களுக்கும் இடையில் முழுமையாக வரவில்லை என்பதன் கேள்விக்கு பின்னால் எமது ஒற்றுமையின்மை நின்று சிரித்துக்கொண்டுள்ளதே பதிலாக எனக்கு தெரிகின்றது. வெவ்வேறு குழுமங்கள் இருந்த போதும், தமிழீழ விடுதலை புலிகளின் கட்டுப்பாட்டில் தான் ஈழம் இருந்தது. அதே போல், வெளிநாட்டிலும் பல குழுமங்கள் இருந்த போதும், தமிழீழ விடுதலை புலிகளின் கட்டமைப்பே வலுவாய் இருந்தது. அதனால் தான் போராட்டம் சீராக பயணப்பட்டுக் கொண்டிருந்தது.

2009 ற்கு பின்னர் அங்கும், இங்கும் இந்த கட்டமைப்பு சிதறடிக்கப்பட்டது. அங்கே ஆயுதங்கள் மௌனிக்க, இங்கே ஆளுக்காள் திசைமாறிப் பறந்து விட்டனர். அங்கு பல அரசியல் அமைப்புகளும், அரசியல்வாதிகளும் பிளவுபட்டனர். நிறைய உதவும் அமைப்புகள் உருவாகின. இங்கு பல குழுமங்கள் உருவாகின. தமிழீழ விடுதலை புலிகளின் சொத்துக்களை வைத்திருந்தவர்களில் பலர் நம்பிக்கை துரோகிகள் ஆகினர். ஒரு சமுதாயம் கட்டுக்கோப்பை இழந்தது. எமக்கான புரிதல் எம் ஒற்றுமையிலேயே தங்கியுள்ளது. போராட்டத்தை எம் பலம் கொண்டு நடாத்தினோம். அங்கு புலிகள் ஆயுதமேந்த இங்கு நாம் கோப்பைகள் கழுவியும், குப்பைகள் அள்ளியும் பலம் சேர்த்தோம், ஆனால் கர்ணாக்கள் போன்றவர்கள் எம் போராட்டத்தை சிதைத்து விட்டார்கள் என்று புலம்பெயர்ந்தாரில் சிலரும், வெளிநாட்டில வசதியா இருந்தண்டு, இப்ப புலிகளின் காசையும் எடுத்தண்டு இவர்கள் கதை விடுகிறார்கள் என்று ஈழத்தில் இருந்து சொல்லும் சிலரும், இந்த குறைகளை கூறிக்கொண்டு நாட்களை கடத்துவதை விட்டுவிட்டு நடக்க வேண்டியதை பார்ப்பதே சாலச்சிறந்தது. அங்கிருந்து வந்தவர்கள் தான் இவர்களும். நாம் ஒரு இனத்தவர்கள் தான். அங்கும் துரோகிகள் உண்டு. இங்கும் துரோகிகள் உண்டு. அங்கும் உணர்வாளர்கள் உண்டு. இங்கும் உணர்வாளர்கள் உண்டு. அங்கும் போராளிகள் உண்டு இங்கும் போராளிகள் (ஆயுதம் ஏந்தாத போராட்டம்)உண்டு.ஆக, நடந்தவைகளை குறைகூறி நாட்களை இனியும் விரயம் செய்யாது, தலைவன் சொல்லிச் சென்றவைகளை செய்து முடிப்பதில் முனைப்பு கொள்ளலே சரியானது. எண்ணற்ற அரசியல்வாதிகள்நூற்றுக்கணக்கான குழுமங்கள் , ஆயிரக்கணக்கான இடைத்தரகர்கள்.... அனைவரும் ஒருகோட்டில் இணையாது எப்போதும் தமிழீழம் அமையாது. நம்மவர் ஒற்றுமையை தாண்டி... ஆரம்ப உதவிகள் செய்த தமிழ்நாட்டு அரசியலும் அரசியல்வாதிகளும் வலுச்சேர்த்தனர். ஆனாலும், பின்னாளில் வந்தவர்கள் துரோகமே செய்தனர். தற்போது நாம் தமிழர் கட்சி ஒன்றே தமிழர்களுக்கான கட்சியாக வேகமாய் வளர்ந்து நிற்கும் நிலையில், நாம் தமிழர் கட்சியை நாம் ஆதரிப்பது பற்றி அடுத்து பார்ப்போம்.



உணர்வுடன்,

ஐங்கரன் கதிர்காமநாதன்

## முகநூல் யுத்தம்

இங்கேதானே புருட்டஸ்
தன்னை யூலியஸ் சீசராக்கிக்கொள்கிறான்.



இங்கே மான்களும்
மறைமுகமாய்
சிங்கங்களை வேட்டையாடும்.

ஒருநாளில் மகிழ்ச்சி தரும்
மறுநாளில் அதிர்ச்சி தரும்

சிலவேளை களிப்பு
பலவேளை சலிப்பு

சிலநேரம் விருப்பு தரும்
சிலநேரம் வெறுப்பு தரும்

தனிமைக்கு தோழனாகும்
தவிக்கும்படி துரோகியாகும்

கலையை கொட்டி மகிழ்விக்கும்
தலையில் குட்டி தண்டிக்கும்

சாதரண ஆளையும்
தலைவனாக்கும்
தலைவனையும்
சதா ரணமாக்கும்

பிரபலம் அடையச் செய்யும்
பின் ரணம் அடையச்செய்யும்

வாழ்த்து இடும்.
மறைமுகமாய்
வக்கிரம் தரும்.

இங்கே கிடைப்பவையை
எடுத்துச் சேமிக்கவியலா.

இது போட்டிக்களம்.
பொறாமைத்தளம்.
பொறுமை குறைவாகவே
வருகிறது வலம்.

முகநூல்
பகிரங்கமான வெற்றுப் பலகை.
எவரும் எழுதலாம்
எதுவும் பதியலாம்
வாயிற்காவலர் அற்ற
அரண்மனைத் தோப்பிது.

இங்கே பாஞ்சாலியின்
துகில் உரியப்படுகையில்
படமெடுப்போரே அதிகம்.
சேலை கொடுப்போரோ
அரிது...

கண்ணன்கள் குளிக்கையிலே
கன்னியர்களினால்
ஆடைகள் திருடப்படும் இடமிது...

தூண்டில்களை
கையில் வைத்தபடி
மீன்கள் பாதுகாப்பு இயக்கம்
இங்கேயே அதிகம் நடாத்தப்படுகிறது...



-யோ.புரட்சி

## ஆம் இதுவும் நாங்கள் தான்....



இன்றும் அந்த உன்னத மனிதர்கள் வாழ்ந்த அந்த பொற்காலத்தை எண்ணி பார்க்கின்றேன். கண்கள் பனிப்பதை தவிர எதுவுமே என்னால் மட்டும் அல்ல அன்று கம்பீரமாக நம்மையும் எம் தேசத்தையும் வழிநடத்தி சென்ற தளபதிகளாலும் எதுவும் செய்ய முடியாது.

போரில் இறந்தவர்கள், காணாமல் ஆக்கப்பட்டவர்கள் போக மீதி நடைப்பிணங்கள் தானே! எங்களுக்கென்று ஒரு மாபெரும் தலைவன் அவன் தன்னை மட்டும் இந்த மண்ணுக்காக தரவில்லை. தன் குடும்பத்தையும் இந்த தேசத்துக்காக விதைத்த தன்னிகரில்லாதவன். அந்த ஒப்பற்ற தலைவனுக்கு தோளோடு தோள் சேர்க்க தானையை வழிநடத்த தளபதிகள். அவர்கள் வழி நடத்தலிலே இந்த மண்ணின் விடுதலைக்காக ஆயுதம் ஏந்தி களமாடிய தேவைப்படும் பட்சத்தில் தங்கள் உடலையும் ஆயுதமாக்கிய ஒப்பற்ற சேனை எங்களிடமிருந்தது. சட்டம் ஒழுங்கு முறைப்படி நடத்த தமீழிழ காவற்படை. ஒரு நாடு எப்படி இருக்க வேண்டும்.

அந்த நாட்டின் வீரர்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை கரிகாலன் கவனமுடனும் நுணுக்க முடனும் நுன்னிப்புடனும் கையாண்டான் செயல் வழிப்படுத்தினான். உலகில் எந்த இராணுவத்தினர் போன்று அல்லாத தனித்துவமான படை எங்கள் புலிப்படை. வீட்டுக்கொரு வீரர்களை நாங்கள் அனுப்பி எங்கள் படைகளை விரிவு படுத்தினோம்.

தேவைப்படும் நேரத்தில் இருவரையும், மூவரையும் ஏன் குடும்பத்தையும் கொடுத்தோம். எங்கள் தலைவன் செய் என்பதை செயல் வழிப்படுத்தினர். ஏன் அவர்கள் என்ன வேற்று-க்கிரக வாசிகளா? எங்கள் மண்ணில் எங்கள் சந்ததி நின்மதியாக வாழ வேண்டும் என்ற ஒன்றைக்காரணத்தை தவிர அவர்களிடம் எந்த காரணங்களும் இருக்க வில்லை.

இன்று அந்த உன்னத மாமனிதர்கள் காட்டிக்காத்த தேசம் எதை நோக்கி பயணித்-துக் கொண்டிருக்கின்றது. யுத்தம் 2009ம் ஆண்டு கூட்டு நாடுகளின் கூட்டுச்சதியால் முடிவுக்கு கொண்டு வரப்பட்ட பின்னர் திட்டமிட்டு எங்களை அழிக்க பலாலியில் கஞ்சா தோட்டம் இயங்குகின்றனர் ஸ்ரீலங்கா இராணுவம். ஏன் தமிழ் இளம் பெண்கள் பேருந்துகளில் பயணிக்கையில் பொது வெளியில் தொலைபேசி இலக்கங்களை கேட்பது மட்டும் அன்றி தங்கள் இலக்கங்களை எழுதி கொடுத்து விட்டு செல்கின்றனர்.

இராணுவக்கட்டுப்பாடுகளுக்கு மத்தியில் பாடசாலை வாசல்களில் கஞ்சா விற்பவன் யார்? கேரள கஞ்சா கடல்மார்க்கமாக வடபகுதிக்கு எந்த தங்கு தடையுமின்றியா வருகின்றது. இவ்வாறு என் ஈழம் இன்று சிதைக்கப்பட்டு சின்னா பின்னமாக்கப்பட்டுகின்றது எங்கள் கண் முன்னே! பேரம் பேசும் அரசியல் தலைமைகளும் இராணுவ நிகழ்வில் பல்கலைக்கழக துணைவேந்தர் பங்கேற்கின்ற நிலையில் தங்கள் உதிரத்தையும் உடலையும் வித்தாக்கி காத்த தேசம் சென்று கொண்டிருக்கின்றது. மாவீரர் தினம் வந்தால் பயம், தீலீபண்ணன் நினைவு தினம் செய்ய பயம் பயம் எவ்வளவு நாளுக்கு இந்த பயம்? நாங்கள் அஞ்சி நடுங்கி கை கட்டி தலையாட்டி வந்தவர்கள் அல்ல.

இந்தியா எங்கள் இயக்கம் வளர பெரும் பங்காற்றியது. ஆனாலும் அவர்கள் எங்களை தங்களின் சேவகர்களாக பயன்படுத்த நினைப்பதை அறிந்த தலைவன் அண்டிப்பிழைக்க வில்லை. ராஜீவ் காந்தி கொலைவழக்கில் கைதியாக்க இந்தியா சதி செய்ததை அறிந்த எங்கள் கிட்டு மாமா உயிரை துச்சமென தன்னோடு வந்த இருபது புலி வேங்கைகளோடு நடுக்கடலில் தீக்குளித்து எங்கள் வீரத்தை இந்திய அரசுக்கு நிரூபித்தும் காட்டினார். நாங்கள் ஈழத்தமிழர்கள் மண்டியிட்டு சாவதை விட மானத்தோடு சாவதே மேல் என்ற மானப்பரம்பரை.

அன்று எங்களுடன் எதிரி ஆயுதம் ஏந்தி போர் புரிந்தான். இன்று வஞ்சகத்தையும் சூழ்ச்சியையும் பயன்படுத்தி இன்று எங்களை அழிக்க போர் தான் புரிகின்றான். நாங்கள் எங்கள் அழிவுகளையும் தொலைத்தவைகளையும் தொலைத்த இடத்தில் புதைத்துவிட்டு புத்தியினால் அவன் வஞ்சகத்தை துரத்திடுவோம்.......

- ஈழத்திலிருந்து காவியா....

## மூன்றாம் பாலினத்தின் அகமுகம்...



அன்புள்ள தம்பிக்கு..........

நான் உன் முகம் கண்டு வெகு நாட்கள் கழிந்திருக்கலாம். ஆனாலும் என்னுள் வீறிட்டு எழும் உனக்கான எனதுபாசப்பிணைப்பை வாய்வழி மூலம் கூறும் தைரியம் அற்றவள் நான். அதனால்தான் என் எழுத்துகளால் சொல்ல முனைகின்றேன். சிறு வயது கொண்டே எனக்கான ஒரு உறவாக உன்னை தவிர எனக்கு யாரும் இருந்தது கிடையாது. உன் பின் எட்டு வருடங்கள் பின் வாங்கியே சிறியவனும் உருவானான் நம் தாய் வயிற்றினில். என்னை பற்றிய உன் எண்ணங்கள் பலவாறு விஸ்தரித்து இருப்பதை நான் அறிவேன். சிறு வயது கொண்டு கடல் விட்டு நானும் கண்டம் விட்டு நீயும் நம் தாயகம் பிரியும் வரை போட்டுக்கொண்ட சண்டைகளும் ஊடல்களும் ஏராளம். ஆடை தொட்டு தொலைக்காட்சி பார்ப்பது வரைக்குமான நாம் வீட்டில் போட்டுக்கொண்ட சண்டைகளை நினைத்துப்பார்க்கிறேன்.

அம்மாவினதும் அப்பாவினதும் பெரியம்மாவினதும் அம்மம்மாவினதும் பாசத்துக்காய் நாம் சண்டையிட்ட நாட்கள்அதிகம். என் பதின்ம வயது பாலின மாற்றங்களை, அறிகுறிகளை நன்கு அறிந்தவன் நீ. என்னை முன்னிட்டு உன் நண்பர்களின் கேலிக்கைகளையும் கிண்டல்களையும் எனக்காய் பொறுமையுடன் கையாண்ட உனக்கு தலை வணங்குகிறேன்.

என் பாலின அடையாளம் குறித்து வீட்டில் உன்னை தவிர வேறு யாரிடமும் நான் பகிர்ந்து கொண்டது கிடையாது. ஆரம்பத்தில் நீ எனக்கு ஆதரவாக இல்லை என்பதையும் நான் அறிவேன். ஒரு ஆணாய் ஒரு தம்பியாய் ஒரு சமூகவாசியாய் அண்ணாவை நீ ஒரு அக்காவாக ஏற்கும் அளவிற்கு அப்போது உனக்கு பக்குவம் இல்லை என்பதையும் நான் அறிவேன். இப்போது உனக்கு ஒன்றை கூறுகின்றேன்.

என் நிமித்தம் உன் நண்பர் மத்தியில் நீ கேள்விக்குள்ளாக்கப்பட்டிருந்தால் என்னை ஒரு கணம் மன்னித்துக்கொள். இன்னும் ஒன்றையும் கூற விளைகின்றேன் என் பாலின மாற்றத்துக்கு எந்த வகையிலும் நான் காரணம் கிடையாது. விஞ்ஞானம் அறிந்த நீ இப்போது இதை உணருவாய் என நம்புகின்றேன்.

உன் பிரிவுகளில் நான் உன்னையெண்ணி சிந்தும் கண்ணீரை நீ அறிந்திருக்க மாட்டாய். பழையவை எண்ணி நித்தமும் ராத்திரிகளில் என் நெஞ்சத்தில் எழும் ஓலத்தை நீ அறிந்திருக்க மாட்டாய்.

அம்மா அப்பாவுடன் தம்பியும் நானும் நீயுமாய் இராபோசனம் கொள்ளுதலை என் ஒவ்வொரு ராத்திரி உணவுப் பொழுதுகளிலும் நினைத்துப்பார்ப்பேன். இப்போது என்னைப்பற்றிய உன் நினைவோட்டம் என்ன என்பதை நான் அறியமாட்டேன். அதை கேட்கவும் மாட்டேன். என்றோ ஒரு நாள் நாம் சந்திக்கத்தான் போகிறோம் அன்று உன்னிடம் கேட்டறிந்து கொள்கிறேன். ஒரு வேளை அதற்கு முன் என் மரணம் என்னை அரவணைத்துக் கொண்டால் என்னை தாயகம் கொண்டு அன்னை மடி சேர்த்திடு.



இப்படிக்கு கண்ணீருடன்
ஜொனிஷா கிறிஸ்ரி
(திருநங்கை)

## தொலைத்துவிட்டோம்



குந்தியிருந்த இடமுமில்லை
கூடி மகிழ்ந்த நிலமுமில்லை
சேர்ந்து வாழ்ந்த சொந்தமெல்லாம்
சென்ற இடம் புரியவில்லை

புழுதி மண்ணில் நடந்தாலும்
புயல் காற்று வந்தாலும்
நீரருந்தி பசி போக்கி வாழ்ந்தாலும் நேற்றிருந்த நிம்மதி
எங்கே என்று புரியவில்லை

தலைக்கு மேலே வெடிகுண்டு
மனம் பதைபதைத்த கணம் உண்டு
பிணத்தின் மேல் பிணம் புதைத்த
நிலை உண்டு
ஆனாலும் அந்த திமிர் நிமிர்கொண்ட
வாழ்வு போன இடம் புரியவில்லை

கிட்டிப்புள்ளு கிளித்தட்டு எட்டுக்கோடு மண்ணோடு தடம் பதித்த விளையாட்டு
தடம் மாறி ஜபோன் ஜபாட் என
இடமாறிப் போனாலும்
பணம் குறையின்றி நிறைவாகக்
கிடைத்தாலும்
மகிழ்வின்றி மனம்திசையின்றி
போனவிடம் எங்கென்று புரியவில்லை

அந்தி நேரம் ஆகாயம் வீடு
சொந்தம் கூடி சொர்க்கம் கண்டோம்
குற்றம் குறை பேசி - அன்று
நடந்த கதை பேசி
அணு அணுவாய் அத்தனையும்
நித்திரை முன்பகிரிந்தோம்

இன்று

பக்கத்து வீட்டுக்காரன்
பாதாளக்கும்பல் போலவும்
வீட்டுக்குள் உள்ளவர்கள் என்றோ தெரிந்தவர்கள் போலவும்
ஒரு தலையாட்டல்
ஒரு சிரிப்போடும் நகர்த்தி விடுகிறது
அலை பேசியலோ
வலைபேசியிலோ
காத்திருக்கும் மு (அ)கம் தெரியா நட்பு
கால் கடுக்க திரிந்ததும்
களவும் கற்று மறந்தும் தந்த
அந்தக்கால தித்திப்பான
நட்பு நிமிடங்கள்
தொலைந்த இடம் புரியவில்லை

ஆலமரம் அரசமரம் இருந்த இடம்.தெரியவில்லை
புத்தன் வந்து கள்ளக்குடித்தனம்
புகுந்த நிலை புரியவில்லை
ஆனை முகத்தானின் யானைத் தந்தம் அந்தப்புத்தன் கையில் போன நிலை புரியவில்லை



- அல்வையூர் தாசன்

## சொல்வாயோ என்னுயிரே?




அன்னை தந்த தமிழே
உயிரெனும் மேலாய்
உன்னை நேசிக்கிறேன்
உன்னை பூஜிக்கிறேன்..

முத்தமிழாய் என்னுள்ளே
முக்கனிச்சுவை தருகிறாய்
முக்காலமும் அறிந்தவன்
சொல்லித்தான் போனானாம்..

எக்காலமும் உன்னோடு என்வாழ்வென
அவ்வாக்கை நீ மெய்ப்பித்தே
ஆழிதாண்டி வந்தும் நீங்காதென்னுள்
கனவிலும் நினைவிலும் நீயாகிறாய்..

காதல் செய்கிறேன் உன்னை
தூக்கத்திலும் கவிதைகளாய்
உளறுகிறேன் பிதற்றுகிறேன்
எனை பார்த்தோர் பைத்தியமென்றனர் ..

நித்தமும் உன்னோடு சித்தமெல்லாம் நீயாக
அக்கரை சீமையிலே பாடும் குயில் நான்
ஈழமண் தொட்டு பாடும் காலம் வராதோ
ஈழத்தமிழிச்சி எனும் பெருமையோடு...

சொல்வாயோ நீ என்னுயிரே
எனை ஆளும் உயிரின் ஒளியே....



-வரதி மோகன்

## ஜீவன் என் புருஷன்....!

தொடர் கதை பார்வை-1

பிரியா நீ கல்யாணம் செய்ததும் எங்களை மறந்திட மாட்டியே என்றாள் தோழி நிகிதா."ஏய் கணவன் வந்துவிட்டால் எங்கள் நினைவேவராதடி, அவள் கணவனைத்தான் சுற்றி வருவாள்" என்றாள் இன்னொரு தோழி. இப்படி தோழிகளின் கலாட்டாவின் சிரிப்பொலி அறையைதாண்டிமுட்டிமே தி வீடு எங்கும் பட்டுத்தெறித்தது."சும்மா இருங்கடி" என்றுவெட்கத்தில் குளைந்தாள் பிரியா. சிரிப்பு சத்தம் கேட்டதும் பிரியா அறைக்குள் வந்தபிரியாவின் அம்மா பவளம்"என்ன இங்கே ஒரே சத்தம் இன்னும் யாரும் தூங்கவில்லையோ? நேரம் பன்னிரெண்டைத் தாண்டிவிட்டது; விடிந்தால் கல்யாணம், எல்லோரும் பேசாமல் நித்திரையை கொள்ளுங்கள்" என்றதும், அறை எங்கும் அமைதியானது. ஆனால் பிரியாவுக்கோ தூக்கம் வரவில்லை, கனடா எப்படி இருக்கும்? நான் ஆசைப்பட்டது போல வெளிநாட்டு வாழ்க்கை எனக்குக் கிடைக்கப்போகிறது, ஜீவனைத்திருமணம் செய்ததும் ஒரு சில மாதங்களில் நான் கனடாபோய்விடுவேன்என்றுகனவுலகத்தில் மிதந்தாள்; மகிழ்ச்சி வெள்ளத்தில்கண்களில் தூக்கம் வரமறுத்தது; அந்த வாழ்க்கை எப்படி இருக்கும் என்ற மனக்கோட்டையின் எண்ணங்களுடன் காலைவிடிந்தது.




கோலாகலமாக திருமணம் இனிதே நிறைவு பெற்றது. திருமணவாழ்வின் முதற்கட்டமாக ஜீவனும் பிரியாவும் கணவன் மனைவியாக கோயிலுக்குச் சென்றனர். கோயிலுக்கு போக முன்பே கோயில் பூஜை பார்த்து நல்லபடியாக வழிபட்ட பின்னர் பிரியாவை கடைகளுக்கு கூட்டிச்செல்ல வேண்டும்; அவளுக்கு நிறைய உடைகள் மற்றும் வேறு பல ஆபரணங்களும் தன் ஆசைப்படி வாங்கிகொடுக்கவேண்டும் என்று தனக்குள் எண்ணியிருந்தான் ஜீவன். அதன்படியே சாமியை வழிபட்டதன் பின்னர் கடை வீதிக்குச்சென்றனர்.

வீதியின் இருபக்கமும் புடவைக்கடைகளும் நகைக்கடைகளும் குவிந்திருந்தன ஜீவனுக்கு தன்மனைவி பிரியாவுக்கு முதன்முதல் அழகான ஒரு சேலை வாங்கி கொடுக்க வேண்டும் என விரும்பிமனைவியை ஓர் புடவைக்கடைக்குக்கூட்டிச் சென்றான். அங்கிருந்த கடைக்காரர் "தம்பி என்ன பார்க்கிறீர்கள்?" என்று கேட்க, பிரியாவைத்திரும்பிப்பார்த்தான் ஜீவன். "பிரியாஉனக்குசேலைஅழகாகஇருக்கிறது; உனக்குப்பிடித்தது போல் சேலை எடுத்துக்கொள்" என்றான். என்னதுசேலையா? என்பது போல வியப்புடன் பார்த்தாள் பிரியா. ஜீவன் சொல்லி முடிப்பதற்குள் அவள் முன் சேலையைக்கு வித்தார்கடைக்காரர். "என்ன ஜீவன் எதற்காக எனக்குச்சேலை? எனக்குச்சேலைபிடிக்காது; கோயிலுக்கு முதல்முறை உடுத்த வேண்டும் என்று அம்மா சொன்னதினால் தான் உடுத்தி வந்தேன்; மற்றபடி எப்போதும் வெளிநாட்டுமாடல் ஆடைகள் தான் அணிவேன்" என்றாள். பிரியா என்ன சொல்லுறாள்? அம்மா சொன்னாவே பிரியாக்கு சேலைஅணிவதுதான்பிடிக்கும்; எந்தக்கொண்டாட்டம் திருவிழாக்களானாலும் பிரியாசேலைஉடுத்தும் அழகேதனிஎன்று பிரியா ஏன் இப்படிச்சொல்கிறாள்?. சிலநேரம் கனடாவில் நம்நாட்டு ஆடைகள் அணிய முடியாதென நினைத்திருப்பாள் போல என தனக்குள் எண்ணிக்கொண்டவன் தனக்குப் பிடித்த நிறத்தில் சேலையைக்காட்டி "இது உனக்கு அழகாக இருக்கும் வாங்கிக்கொள்" என்றான். பிரியா விருப்பமில்லாமல் இரண்டு சேலைகள் எடுத்துக்கொண்டாள்.

இருவரும் கடையை விட்டுவெளியேவரும் போது வெள்ளிக்கொலுசுகள் எதிர்க்கடையில் மின்னுவதைக்கண்டான்.கொலுசு நம்தமிழ் பெண்களுக்கு மிகவும் பிடிக்கும் என்று அம்மா சொல்லிக்கேள்விப்பட்டிருந்தான் ஜீவன். பிரியாவுக்கும் பிடிக்குமென நினைத்து உடனேயே அவளுக்கு மணிகள் நிறைந்த கொலுசை வாங்கிக்கொடுத்தான்.பிரியாவின் கண்கள் அங்கிருந்த நகைகளையே நோட்டமிட்டது.அதைப்புரிந்துகொண்ட ஜீவன் அவளுக்குப்பிடித்தநகைகளை வாங்கிக்கொடுத்தான்; அப்போதுதான் பிரியாமுகம் பிரகாசமாக மலர்ந்தது.

கணவனும் மனைவியும் வீட்டுக்குச்சென்றதும் சமைத்து வைத்து விட்டுமகளுக்கும் மருமகனுக்குமாக காத்திருந்த பிரியாவின் தாய் உணவு பரிமாறினாள். இருவரும் சாப்பிட்டதும்.... -தொடரும்.........



## ஆறாம் அறிவு...

ரியா ராஜ்குமார் மரணமும், அதனூடே நாம் சிந்திக்க வேண்டியதும்.......

ரியா, தனது தந்தையால் தனது பிறந்த தினத்தன்று கொலை செய்யப்படுகின்றார். தந்தையார் காவற்படையினரால் கைது செய்யப்படுகின்றார். அவர்மேல் கொலைக் குற்றச்சாட்டு உறுதிப்படுத்தப் படுகின்றது. ஓரிரு நாட்களில் அவரும் வைத்தியசாலையில் இறந்து போகின்றார். ரியாவின் தாயாரும் தந்தையும் பிரிந்து இருந்தார்கள், ரியா தாயாருடன் இருந்தார் என்பதும், ஆனாலும் தந்தையாருடன் தனியே வெளியில் செல்ல எந்தவொரு சிக்கல்களும் இல்லாதபடி தந்தையாரின் நடத்தை இருந்ததால் தாயாரும் அனுமதி கொடுத்திருந்தார் என்பதும் யாவருமறிந்தது.ரியா இறந்த செய்தி அலைவரிசையில் வெளியாகிய அந்த வினாடி தொட்டு, அனைவரும் தந்தையாரை சகட்டுமேனிக்கு திட்டித் தீர்த்தனர். தாயார் மேல் பரிவு காட்டினர். ரியாவிற்காக அழுது தீர்த்தனர். தந்தையாரின் மரணச் செய்தி கிடைத்த பின்னர், எல்லோர் பார்வையும் தாயாரின் மேல் சந்தேகக்கண் கொண்டுள்ளது. இப்போது தான் அனைவரும், தந்தையார் பற்றி அவர் உறவுகளும் நண்பர்களும் சொன்ன விடயங்களை மறுபரிசீலனை செய்கின்றனர். மகளையும் கொன்றுவிட்டு தானும் தற்கொலை செய்யத் துணியும் அளவிற்கு அப்படி என்ன தான் ரியாவின் தாய் மேல் தந்தைக்கு வெறுப்பு என்று அலசத் தொடங்கியுள்ளனர்.பொதுவாக ஒரு குடும்பம் பிரிகின்ற போது சட்டமானது, குழந்தையை அவரின் தாயாரின் கைகளிலே தான் அனேகமான நேரங்களில் கையளிக்கின்றது. தந்தையார் நடத்தையில் சந்தேகம் வராது இருப்பின், அவர் தனது குழந்தையை வந்து பார்த்துச் செல்லவும், வெளியில் கூட்டிச் செல்லவும் இடமளிக்கின்றது. ரியா விடயத்திலும் அவ்வாறே. ரியாவை தனது தந்தையுடன் வெளியில் செல்ல தாயாரும் அனுமதித்துள்ளார் என்ற நிலையில், ஒரு தந்தையாக அவர் சரியாய் நடந்துள்ளார் என்பதே உண்மை. இவ்வாறு இருக்கையில், திடீரென்று, தனது குழந்தையின் பிறந்த நாள் அன்றே அந்தக் குழந்தையையும் கொலை செய்து விட்டு, தானும் இறந்து போக ஒரு மனிதன் எண்ணியிருக்கின்றார் என்றால் அவருடைய மனநிலையை நாம் கொஞ்சம் கவனமாக யோசிக்க வேண்டியுள்ளது. தனது முன்னாள் காதலி.̈.மனைவியில் அவருக்கு இருந்திருக்கும் ஆழமான வெறுப்பும், அவருக்கு நல்ல பாடம் புகட்ட வேண்டும் என்னும் நீண்டநாள் வெறியும் அன்று காத்திரமாக வெளிவருவதற்கு ஏதாவது ஒரு பாரிய நிகழ்வு நடந்தேறியிருக்க வேண்டும். அவர் தன் மகளுடன் அன்று சேர்ந்திருந்த போது அவள் தந்தையிடம் ஏதாவது முறைப்பாடு செய்திருக்கலாம், அவளுக்கு வீட்டில் ஏதாவது நடந்திருக்கலாம், அதை சட்ட ரீதியாக அணுகும் எண்ணத்தைக்கூட யோசிக்காமல், ரியாவின் தாய்மீதிருந்த உச்சக்கட்ட வெறுப்பு தந்தையின் கண்ணை மறைத்திருக்கலாம். அல்லது, அவளுடன் தனது பிள்ளை இருக்க கூடாது, அதற்கு வேறு மாற்று இல்லாததால் இந்த முடிவிற்கு வந்திருக்கலாம். இதை நான் சொல்வதால், ஆண் ஒருவனின் பக்கத்தால் இருந்தே நான் இதை யோசிப்பதாய் நீங்கள் நினைக்கலாம், ஆனால் ஆணோ பெண்ணோ, தன் குழந்தையையும் கொலை செய்துவிட்டு, தானும் தற்கொலை செய்ய முடிவெடுப்பது என்பது, தன் முன்னாள் துணையில் கொண்ட வெறுப்பாகவே என்னால் பார்க்க முடிகின்றது. " நான் இவருக்கு செய்து காட்டுறன் பார்" என்ற விதமாகத்தான் தெரிகின்றது. அத்துடன், தந்தையாரை கைது செய்த ஒன்ராறியோ மாநில பொலிஸார் அவரை பீல் மாநகர பொலிஸாரிடம் ஒப்படைக்கும் போது எந்தவொரு தற்கொலை முயற்சியும் அவர் செய்திருப்பதாக தங்களுக்கு தெரியவில்லை என்று தெரிவித்த செய்தியும் வந்தது. அங்கே ஒரு குழந்தையை கொலை செய்த குற்றவாளியாகவே அவர் பார்க்கப்பட்டுள்ளார். மனித உயிரிற்கு மதிப்பு அளிக்காத ஒருவருக்கு, அவருடைய உயிரிற்கு மதிப்பளிக்கப்படவில்லை என்பதே உறுதியாகின்றது. ஆக, சட்டமும் தன் கடமையை செய்யத் தவறியதாலேயே அவரின் உயிரும் போனதாக எடுத்துக் கொள்ளலாம். இந்த நிகழ்வுகளிலிருந்து நாம் எடுத்துக் கொள்ள வேண்டியவையாவன என்னவெனில், இருவர் இணைந்து வாழும் வாழ்வில், என்ன சிக்கல்கள் வந்தாலும், குழந்தை வளர்ந்து தனது சொந்த மூளையில் செயற்படும் நாள் வரைக்கும் பிரியாமலோ அல்லது வேறு ஒருவருடன் தவறான தொடர்பு வைக்காமலோ இருக்க தங்களை கட்டுப்படுத்தும் பெற்றோர்களே குழந்தைகளை பெற்றுக்கொள்ள வேண்டும். சொற்ப நேர சுகத்திற்காக உறவாடி பிள்ளைகள் பெறும் காமக்கூத்துகளை தவிர்த்தல் நன்று.

ஆங்கிலத்தில் உடலுறவிற்கு sex பண்ணுதல் எனும் வார்த்தை பாவிக்கப்பட்டாலும், மனதால் இணைந்து, காதலில் குழைந்து, இன்னொரு உயிரை தயாரிக்கும் நிலைக்கு " make love " எனும் சொல்லாடலே பயன்படுத்தப் படுகின்றது. இரண்டுமே sex சம்மந்தப்பட்டது ஆக இருப்பினும், வேறுபாடு நிறையவே உண்டு. ஆக, வெறும் sex ல் பிள்ளைகள் பெறுவதே சரியானதல்ல என்பதே இங்கு வெளிச்சமாகின்றது. பெற்றோர்களே,பிள்ளைகள் உங்கள் சொத்தல்ல.அவர்கள் தனி மனிதர்கள். அவர்கள் மேல் கைவைக்கும் அதிகாரம் கூட உங்களுக்கு இல்லை. உங்கள் உயிரை எடுக்கும் அதிகாரமே உங்களுக்கு இல்லை, ஏனெனில் அந்த உயிர் உங்களுக்கு சொந்தமானது இல்லை. அப்படி இருக்க இன்னொருவர் உயிரை எடுப்பது என்பது மிகமிக தவறானது. அதுவும், கனடா போன்ற நாடுகளில் பிள்ளைகளை நன்றாய் வளர்த்தெடுக்க அரசாங்கமே அன்றாடம் எத்தனையோ முனைப்புகளை எடுத்துக்கொண்டே உள்ளது. பிள்ளைகளுக்காக அவர்கள் எதுவும் செய்யத் தயாராய்த்தான் உள்ளனர். உங்களால் முடியாவிடின், அவர்களிடம் கொடுங்கள். உங்கள் தனிமனித கோபம், பழிவாங்கல்களை பிள்ளைகளில் காட்டாதீர்கள். இப்போது பிள்ளையுமின்றி, அந்த பிள்ளை உருவாக காரணமான உயிரும் இன்றி, அந்தத் தாயாரின் இனிமேலான வாழ்க்கை எப்படியெல்லாம் நகருமோ ??? எம் சமுதாயத்திலும் நாம் இப்படியான ஆண், பெண் பழிவாங்கல்களின் உச்சமாக குழந்தைகளை கொலைசெய்து வஞ்சம் தீர்த்த நிகழ்வுகளை கடந்து வந்துள்ளோம். இன்றும் எத்தனையோ பிரிந்த தம்பதிகளின் அன்றாட துன்பியல்களை காண்கின்றோம். அவர்களின் மனநிலை வினாடிகளுக்கு ஒருமுறை மாற்றம் காண்பதை உணரக்கூடியதாக உள்ளது. அந்தந்த இடத்தில் இருந்தால் தான் உங்களுக்கு புரியும் என்று சிலர் சொல்வதும் விளங்காமலில்லை. ஆனாலும் ஒன்றை நாம் யோசிக்க வேண்டும். உங்களோடு இணையாக இருந்தவர், சில-பல சரியான, சரியில்லாத காரணங்களால் பிரிந்து சென்று விட்டால், அவர் உங்களுக்கு துரோகம் செய்திருந்தாலும் கூட, அவரை பழிவாங்க உங்கள் நேரத்தை செலவழிக்காதீர்கள். அவர்களுக்கான தண்டனையை நிச்சயம் அவர்கள் அனுபவித்தே தீர்வர். நீங்கள் உங்கள் வாழ்க்கையை தயக்கமின்றி தொடருங்கள். அவர் இப்போ என்ன செய்வார், யாருடன் இருப்பார், என்னை நினப்பாரா போன்ற கேள்விகளில் காலத்தை தொலைக்காதீர்கள். கணவன் மனைவியாக, எந்தவொரு குறையுமின்றி வாழ்க்கை செய்பவர்களும், நம்பிக்கை என்னும் ஒற்றை வார்த்தையில் தான் பயணிக்கின்றார்கள். பிரிந்தவர்களை நினைத்து, பழிவாங்கல்களில் இறங்கி, உயிர்களை அழிப்பதற்கு கொடுக்கப்பட்டதல்ல ஆறாம் அறிவு. இந்த வாழ்க்கை ஒருதடவை மட்டுமே எமக்காக கொடுக்கப்பட்டது.



நன்றி

கவலையுடன்,
ஐங்கரன் கதிர்காமநாதன்

## ஊர்குருவியின் பாடல்

எல்லாமே
முடிந்து போயிவிட்டது
என்ற
அந்த இறுதி நாளிலும்
சில ஊர்க்குருவிகள்
தங்கள் பாடலை நிறுத்தவே இல்லை...

அந்த உர்க்குருவிகளின் பாடல்
காடு மேடு
கடல் மலை
காற்று என கலந்து
இன்றும் ஒலித்துக்கொண்டே இருக்கின்றது...

நிரப்பமுடியாத அந்த இடைவெளியை
ஏதேதோ கொண்டு நிரப்பப்போவதாய்
சிலர்
கூவிக் கூவி விற்பனை செய்கிறார்கள்...

இப்போதும்
அந்த ஊர்க்குருவிகள்
அந்தப்பாடலை நிறுத்தவே இல்லை...

அந்தப்பாடலுக்கு
இராகம் சரியில்லை எனச் சிலரும்
சுருதி சரியில்லை எனச் சிலரும்
தாளம் சரியில்லை எனச் சிலரும்
சங்கதி சரியில்லை எனச் சிலரும்
அந்தப்பாடலுக்கான மெட்டை மாற்றவே முயற்சிக்கின்றனர்...

தன் பேரக்குழந்தையுடன்
தனித்திருக்கும் மூதாட்டிக்கு
தன் பேரக்குழந்தையின்
எதிர்காலம் பற்றிய கனவைத்தவிர
வேறு என்ன ஆசை இருந்திடப்போகின்றது...???



-கடலூரான் சுமன்

## மரணம் என்னும் அழகு

வானத்தில் வானவில் அழகு
மலர் மீது மழைத்துளி அழகு
கரை தழுவும் அலை அழகு
கோடையில் நிழல் அழகு
சோலையில் புள்ளினம் அழகு
மாலையில் கதிரவன் கதிர் அழகு
காட்டிடை பயம் அழகு

நாட்டிடை விடியல் அழகு
மேட்டிடை சமத்துவம் அழகு
மேல் சாதி கீழ்ச் சாதி அழிந்திடல் அழகு
அந்த மதம் இந்த மதம் அத்தனையும் அழிந்திடல் இன்னும் அழகு
இழிசனர் இனி இல்லை என முழங்குதல் அழகு
போலிகளின் மரணம்
கேட்டிடல் அழகு

முதலாளி தொழிலாளி
மேல் என்றும் கீழ் என்றும்
மக்களின் மடமைதனை
மாய்த்திடல் அழகு

வறுமையின் மரணம் அழகு
பொறுமையின் புகழ் அழகு
வெறுமையில் துயருறா
உள்ளம் அழகு
துன்பத்திலும் நகைப்பழகு

ஓ மரணமே
நீ யாரைத் தழுவிடினும்
யாரும் பொறாமை கொள்ளார்
அத்தனை அழகு உன்க்கு மட்டுமே!

வாய்த்திட்ட வாழ்வுதனை
வரம் எனவே நினைத்து வாழ்ந்தால்
மரணம் என்னும் அழகதனை
மனிதர் உணர்ந்துயர்வர்!



- வேந்தன் பேரின்பன்

## அன்னையே உன்னை எண்ணி



இரத்தத்தோடு யுத்தம் செய்து
இரவுகளில் நித்திரை மறந்து
உன்னுக்குள் உயிர் சுமந்து
உன்னையே தியாயம் செய்து
எம்மை மண்ணில் படைத்த தவமே!
உன்னையன்றிப் பெரிதாக எனக்கேது உலகில்.

உன் தாவணிக்குள் ஒதுங்கியதை
எண்ணிப் பார்க்கையில் காயமாகுது நெஞ்சம்.
நீ கூறிய புத்திமதிகளைத் திரும்பிப் பார்க்கையில் வள்ளுவர் உயிர் பெறுகிறார்.
உன் வஞ்சனையற்ற வார்த்தைகளுக்கு ஈடுதானுண்டோ
இவ்வுலகில்.
பொய் இல்லாத மெய்யான மெய்யே உன்மடி சாய்ந்திடத் துடிக்கின்றது மனமே!

பஞ்சம் மிஞ்சியே வந்த போதும்
வஞ்சனை வழியில் செல்லவிடாது
கொஞ்சமும் பொய்யான வாழ்வில்
தஞ்சமிடாது தனியொருத்தியாக
நெஞ்சத்தின் துணிவில் நிலையாகி
குஞ்சுகள் எம்மை ஆளாக்கிய எம்
அஞ்சமே கோயில் கட்டிக் கும்பிட வேண்டும் உன்னையே!



யோ.வனிதா

## முன்னேறு( Motivation)

விதைக்கொரு விதைக்கொரு இலக்கு
விண்ணினை அடைவது அதன் கனவு
உனக்கொரு உனக்கொரு இலக்கு
உச்சத்தை தொடுவது கனவு

விளக்கினை எரிப்பதும் காற்று
விளக்கினை அணைப்பதும் காற்று
வருவதை தினமும் ஏற்று
வாழ்வினை பறை சாற்று

கனவுகள் நல்வாழ்வினை அளிக்கும்-வெற்று
கனவுகள் நல்நாளினை அழிக்கும்
கடமைகள் சுகத்தினை அளிக்கும்-வெற்று
கடமைகள் காலத்தை அழிக்கும்

அறிவெனும் கண்கொண்டு நோக்கு
அடைவது முடிவென்று தாக்கு
வாய்மை காப்பது நல்வாக்கு
வளர்ச்சிக்கு அதுவே நற்போக்கு

விழியது வழியும் நீரை
வியர்வை வழியே சிந்து
விதிதனை மெல்ல நொந்து
வழித் தடையினைத் முந்து

தினம் ஒரு தடை-நம்
இனம் ஒரு தடை
உறவொரு தடை-நம்
உறக்கமும் தடை

கோளது எதிர்ப்பினும் வீழாய்-கொடிய
நோயது தாக்கினும் மாளாய்
ஊழ்வினை உறுத்தினும் உறங்காய்-உன்
உயிரினை இழப்பினும் தோற்காய்

வாழ்வெல்லாம் தடைகள் வரினும்
வறுமையில் தினமும் விழினும்
இலக்கினை அடையும் வரைக்கும்
இமைகளை ஒருவிழி மூடாய்



நட்புடன்,
அ.பகீரதன்

# அறிவியல் மற்றும் தொழில்நுட்பம்

## சிட்டி ரோபோட் ஸ்டைலில் பதில் சொல்ல தயார்: கேள்வி கேட்பவர்கள் இங்கே வரவும்.!



பெப்பர் என்னும் ரோபோட், நாளை நடைபெறவுள்ள சிறப்பு குழு கலந்தாய்வில் கலந்துகொள்ள இருப்பதாகச் செய்தி கிடைத்துள்ளது. சிறப்பு குழு கலந்தாய்வு கூட்டத்தில் கலந்து கொள்ளும் முதல் ரோபோ என்ற பெருமையை இந்த பெப்பர் ரோபோட் பெற்றுள்ளது. முகநூலில் எங்கள் செய்திகளை உடனுக்குடன் படிக்க க்ளிக் செய்யவும்.! நான்காம் தொழிற்புரட்சி இந்தச் சிறப்பு கலந்தாய்வில் கலந்து கொள்ளும் பெப்பர் ரோபோட், அங்குக் கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதில் அளிக்குமென்று சொல்லப்படுகிறது. அதிலும் கூடுதல் செய்தி என்னவென்றால், கலந்தாய்வில் பெப்பர் ரோபோட் நான்காம் தொழிற்புரட்சி பற்றிய கேள்விகளுக்கும் பதில் அளிக்கும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

செயற்கை நுண்ணறிவு முன்னேற்றம் இத்துடன் கல்வி குழு, செயற்கை நுண்ணறிவு முன்னேற்றத்திற்கான துணைபுரியும் வழிகள் பற்றிய கேள்விகளும் பெப்பரிடம் கேட்கப்படும் என்பது குறிப்பிடத்தக்கது. பெப்பர் ரோபோட் சர்வதேச ஆராய்ச்சி திட்ட வளர்ச்சியின் ஒரு பங்காக, இந்த ரோபோட் உருவாக்கப்பட்டுள்ளது. உலகின் முதல் பண்பாட்டு சேவையுடன் இனைந்து முதியவர்களை கவனித்து உதவும் ரோபோவாக இந்த பெப்பர் ரோபோட் உருவாக்கப்பட்டுள்ளது. மிடில்செக்ஸ் பல்கலைக் கழக மாணவர்கள் செவ்வாய்க்கிழமை மிடில்செக்ஸ் பல்கலைக் கழக மாணவர்கள் முன்னிலையில் நடைபெறவுள்ள சிறப்பு குழு கூட்டத்தில், பெப்பரின் பணியைப் பற்றி குழு கேட்கும், இதில் முதன்மை நிலைக்குழந்தைகள் கற்பித்தல் சம்பந்தப்பட்ட முன்முயற்சியும் உள்ளடக்கப்பட்டுள்ளது.

ஆட்டோமேஷன் இத்துடன் ஆட்டோமேஷன் துறை மற்றும் ரோபோடிக் துறையின் முன்னேற்றம் மற்றும் எதிர்கால தொழில்முறை பயன்பாடுகள் போன்ற அனைத்து விஷயங்களும் ஆய்வு செய்யப்படும். முடிவு பெப்பர் ரோபோட்டின் ஆர்ப்பாட்ட விளைவுகளை ஆராய்ந்த பின்னர், ரோபோட்களின் பங்குகளை எப்படி கல்வி முறை மற்றும் ஆட்டோமேஷன் துறைகளில் பயன்படுத்துவது என்று முடிவு செய்யப்படும்.

## புதிய பிகாசோ? அய்-டா : ரோபோட் ஆர்டிஸ்ட்.!



அய்-டா எனும் இந்த ரோபோட் தான் கண்களால் பார்ப்பதை தனது பயோனிக் கையில் உள்ள பென்சில் மூலம் வரையும் ஆற்றல் கொண்டது. கார்ன்வாலில் உள்ள இன்ஜினியர்டு ஆர்ட்ஸ்-ன் பொறியாளர்களால் இறுதிகட்ட வடிவமைப்பில் உள்ள அய்-டாவை எதிர்நோக்கியுள்ளார் மெல்லர். புரோஸ்டெடிக் தலை அய்டா உண்மையில் வரையப் போகிறாள், அவள் வர்ணம் செய்யும் தொழில்நுட்பத்தை உருவாக்க நினைக்கிறோம், என்று கூறும் மெல்லர், அய்-டாவின் புரோஸ்டெடிக் தலையை கவனமாக கவனித்து, அவளுடைய புருவங்களை உருவாக்குவதற்கு தனித்தனியாக முடிகளை இணைத்து சிறப்பு நிபுணர்களால் உயிரோட்டமாக கொண்டு வந்துள்ளார். இயக்கங்கள் மிகவும் உயிருள்ளவையாக இருக்கும் ஆனால் ஒரு செயல்திறன் கொண்ட கலைஞராக அய்-டா, பார்வையாளர்களுடன் ஈடுபாட்டுடன் இருக்க முடியும் மற்றும் உண்மையில் அவர்களது செய்திகள் முழுவதையும்பெற முடியும்; இன்றைய தொழில்நுட்பத்தைப் பற்றி அந்த கேள்விகளை எழுப்பமுடியும். அய்-டாவின் ரோபோடிக் தலையானது ஒன்றும் செய்யாமல் மேசையின் மீது நிற்கும், ஆனால் அதன் இயக்கங்கள் மிகவும் உயிருள்ளவையாக இருக்கும்.

கருவிழி கேமராக்கள் அதன் கருவிழிகளில் உள்ள கேமராக்கள் மனித அம்சங்களை அடையாளம் கண்டு, அதன் கண்களைத் தொடர்புபடுத்தி, அறையைச் சுற்றி உங்களைப் பின்தொடர்வதும், நீங்கள் செய்வது போலவே வாயை திறந்து மூடிவிடுவது என அனைத்தும் செய்யும். மிக நெருக்கமாக சென்றால், அதிர்ச்சியடைந்ததை போல கண்களை சிமிட்டிக்கொண்டு பின் நோக்கி செல்லும். ரோபோதெஸ்பியன் பேசவும், கேள்விகளுக்கு பதிலளிக்கவும் கூடிய அய்டா, வெளிப்டையான இயக்கங்களுடன் கூடிய ரோபோதெஸ்பியன உடலமைப்பை கொண்டது என்கின்றனர் வடிவமைப்பாளர்கள். கம்ப்யூட்டர் விஷன் கம்ப்யூட்டர் விஷனில் இயங்கும் ஏஐ (செயற்கை நுண்ணறிவு) மூலம் முக அம்சங்களை அடையாளம் காணவும், உங்கள் முகபாவத்தை பிரதிபலிக்கவும் ரோபோவை அனுமதிக்கின்றது, என்கிறார் என்ஜினியரிங் ஆர்ட்ஸ் -ன் டிசைன் ரு புரொடெசனிங் பொறியாளர் மார்கஸ் ஹோரால்ட். 10 வருட பழைய காரை ஒரே பார்வையில், சுஊ மாறுதலுடன் விற்கலாம். எப்படி? உங்கள் கிரெடிட் ஸ்கோரை இலவசமா தெரிஞ்சுக்குங்க! முந்துங்க! உங்க கிரெடிட் ஸ்கோர் மாறிவிட்டது. ரிப்போர்ட் பதிவிறக்கம் செய்க மெஸ்மெர் அய்-டா தயாரிப்பாளர்கள் மெஸ்மெர் லைப் போன்ற ரோபோட் தொழில்நுட்பத்தைப் அதன் தலையில் பயன்படுத்துகின்றனர். அதனால் ரோபோட் கட்டமைத்து முடிந்ததும் நீண்ட கருமையான முடி, சிலிகான் தோல் மற்றும் 3னு அச்சிடப்பட்ட பற்கள் மற்றும் ஈறுகள் என 2.0 படத்தில் வரும் எமிஜாக்சன் ரோபோ போல தோற்றத்தைக் கொண்டிருக்கும். அன்செக்யூர்டு ப்யூட்சர்ஸ் சாப்ட்வேர் மெக்கானிக்ஸ் மற்றும் எலக்ட்ரானிக்ஸ் மேம்பாட்டை ஒருங்கிணைக்கும் மெஸ்மர், உயிரோட்டமுள்ள முகம் மற்றும் பாவனைகள் கொண்ட சிறிய மனிதவடிவிலான ரோபோவை உருவாக்கும் என்கிறார் ஹோால்டு. ஆக்ஸ்போர்டு பல்கலைகழகத்தில் மே மாதம் தனது துவக்க கண்காட்சி நடத்தவுள்ளது.

## எச்சரிக்கை: குழந்தைகளைக் கொல்லும் மொபைல்போன் மற்றும் வயர்லெஸ் கதிர்வீச்சு.! இதை தடுப்பது எப்படி




அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தின் ஒவ்வொரு வளர்ச்சியுடனும்பல பயங்கர பக்க விளைவுகள் மற்றும் குறைபாடுகள் மனித இனத்தை தாக்கி கொண்டுதான் இருக்கிறது. இவற்றில் நாம் என்றதாம் பயன்படுத்தும் ஸ்மார்ட்போன்கள், மொபைல் போன்கள், டேப்லெட்கள் போன்ற சாதனங்கள் அதிக அளவிலான பாதிப்பை ஏற்படுத்துகின்றது.

முகநூலில் எங்கள் செய்திகளை உடனுக்குடன் படிக்க க்ளிக் செய்யவும்.! இவற்றின் ஆபத்தை அறிந்தும் பயன்படுத்தி வருகிறோம் இவற்றின் ஆபத்தை அறிந்தும், பல சமயங்களில் நேரில் கண்டும் இன்னும் நாம் இவற்றைப் பயன்படுத்திக்கொண்டு தான் இருக்கிறோம். தற்போது கிட்டத்தட்ட அனைத்து வயதினரும் ஸ்மார்ட்போன்கள், மொபைல் போன்கள், டேப்லெட்களை பயன்படுத்தி வருகின்றனர்.

பெற்றோரின் அஜாக்கிரதை இதில் அதிர்ச்சியான விஷயம் என்னவென்றால் பெற்றோர்களும் கூட தங்கள் குழந்தைகளைக் கண்டிக்காமல் அவர்களுக்கும் மொபைல் போன் பயன்படுத்தும் பழக்கத்தை பழக்கப்படுத்திவிடுவது தான் கொடுமை. ஸ்மார்ட்போன் மற்றும் வயர்லெஸ் கதிர்வீச்சினால் ஏற்படும் விளைவுகள் பெரியவர் களை விட 100 மடங்கு குழந்தைகளை பாதிக்கிறது என்பதே உண்மை. ஐபேட் மற்றும் டேப்லெட்களில் அதிக கதிர்வீச்சு ஐபேட் மற்றும் மற்ற டேப்லெட் சாதனங்கள் அனைத்தும் டேபிள் இல் வைத்துப் பயன்படுத்தப்பட வேண்டிய சாதனங்கள் என்பது குறிப்பிடத்தக்கது. ஐபபேட் மற்றும் டேப்லெட்களில் இருந்து வெளிப்படும் நச்சு கதிர்வீச்சுகள் ஸ்மார்ட்போன் மற்றும் மொபைல் போன்களை விடச் சற்று அதிகம் என்கின்றனர் அறிவியலாளர்கள்.

சரியா என்று சிந்தியுங்கள் ஐபேட் மற்றும் டேப்லெட் தயாரிக்கும் இடத்தில்,அவற்றை உருவாக்கிய பொறியாளரிடமிருந்து 20 சென்டி மீட்டர் தொலைவில் தான் இந்தச் சாதனங்கள் சோதனை செய்யப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. மனிதர்களின் ஆரோக்கியத்திற்குத் தீங்கு விளைவிக்கும் கதிர் வீச்சை வெளிப்படுத்தும் சாதனங்களை பிஞ்சு குழந்தைகளின் மடியில் விளையாடக் கொடுப்பது சரியா என்று சிந்தியுங்கள். மெதுவாய் கொல்லும் நஞ்சு கல்வி பயில்வதற்கு இது போன்ற சாதனங்கள் அதிகம் தேவைப்படுவதினால் குழந்தைகளிடம் பெற்றோர்கள் இந்த சாதனங்க்ளை பயன்படுத்த அனுமதித்து வருகின்றனர்.

வயர்லெஸ் கதிர்வீச்சுகள் மெதுவாய் கொல்லும் நஞ்சிற்கு சமம் என்பதை மறக்க வேண்டாம். இந்த மாதத்தில் உங்க கிரெடிட் ஸ்கோர் என்னென்னு தெரியுமா? கிரெடிட் கார்டு ∴ கடன் வேண்டுமா? உங்க கிரெடிட் ஸ்கோரை தெரிஞ்சுக்குங்க! 105 கிலோ டு 70 கிலோ. 30 நாளில் உடல் எடை குறைக்கும் டிரிக் விமானப் பயன்முறை இருப்பினும் இவற்றின் ஆபத்தை நாம் நினைவில் கொண்டு கற்றல் நோக்கங்களுக்காகக் குழந்தைகளிடம் இந்தச் சாதனங்களை வழங்குவதற்கு முன் அவற்றை விமானப் பயன்முறைக்கு மாற்றி, பிறகு கொடுத்தால் பாதிப்புகள் மிகக் குறைவாக இருக்கும் என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர். 6 நிமிடங்கள் மட்டுமே கதிர்வீச்சை தாங்கிக்கொள்ள முடியும் குறைந்தது சுமார் 7 பில்லியன் மொபைல் போன்கள் தற்பொழுது பயன்பாட்டில் உள்ளது. இவை அனைத்தும் 20 வயதிற்கு மேற்பட்டவர்கள் பயன்படுத்தும்படி உருவாக்கப்பட்டுளளது. அணைத்து மாடல் ஸ்மார்ட் போன்களும் இந்த அடிப்படையில் தான் தயாரிக்கப்படுகிறது, 99 கிலோ எடை கொண்ட ஒரு ஆண் வாய்ஸ் கால்ஸ் செய்யும் போது வெறும் 6 நிமிடங்கள் மட்டுமே கதிர்வீச்சை தாங்கிக்கொள்ள முடியும் என்பது குறிப்பிடத்தக்கது.

குழந்தைகளுக்கு இந்த அளவு கதிர்வீச்சுகள் மிகவும் ஆபத்தானது. செல் சவ்வுகளுக்கு தீங்கு விளைவிக்கும் கதிர்வீச்சு மொபைல் போனில் இருந்து வெளிப்படும் கதிர்வீச்சுகள் மனிதனின் உடலில் உள்ள செல் சவ்வுகளிற்கு அதிக தீங்கை விளைவிக்கிறது. அதிலும் 2ஜி போன் இல் இருந்து வெளிப்படும் கதிர்வீச்சுகளை விட 3ஜி போனில் இருட்னது வெளிப்படும் கதிர்வீச்சுகள் அதிக அளவில் பாதிப்பை ஏற்படுத்துகின்றன.

நாம் தற்பொழுது 4ஜி போன்களைப் பயன்படுத்தி அடுத்தபடி ஆபத்தான 5ஜி நோக்கிச் சென்று கொண்டிருக்கிறோம். 3 வயதுக் குழந்தைகளுக்கு அதிக பாதிப்பு பெரியவர்களைக் காட்டிலும் 3 வயதுக் குழந்தைகளின் தலைக்குள், கதிர்வீச்சுகள் அதிகளவிலான பாதிப்பை ஏற்படுத்தி இருக்கின்றது என்று சமீபத்திய ஆய்வு தெரிவிக்கிறது.

கருக்களை கொல்லும் கதிர்வீச்சு குழந்தைகளுக்கு ஏற்படுத்தும் பாதிப்புகளை விட இந்தக் கதிர்வீச்சுகள் வயிற்றில் இருக்கும் கருக்களையும் பாதிக்கிறது என்பது தான் கூடுதல் அதிர்ச்சி தகவல். மொபைல் போன் கதிர்வீச்சைக் குறைப்பது எப்படி? உங்கள் உடல் அருகில் மொபைல் போடுவதைத் தவிர்க்கவும். லவுட் ஸ்பீக்கர் அல்லது ஹெட்செட் மூலம் உங்கள் பே-ானைப் பயன்படுத்தவும். மொ-பைல் போன் பயன்பாட்டில் இல்லாதபோது விமானம் பயன்முறைக்கு மாற்றிக் கொள்ளவும். கார், லி.ٌ.ப்ட் மற்றும் ரயில்களில் மொபைல் போன் பயன்படுத்துவதைத் தவிர்க்கவும். - இரவில் உறங்கும் போது மொபைல் போன்களை உங்களிடமிருந்து விலக்கி வைத்துக்கொள்ளவும். நம்மை நாமே காத்துக்கொள்ளுவோம் பிஞ்சு குழந்தைகளை கொல்லும் அளவிற்குக் கதிர்வீச்சுகளை வெளிப்படுத்தும் இந்த மொபைல் போன்களின் ஆபத்து அறிந்து, இனிமேலாவது இவற்றின் பயன்பாட்டை குறைத்து நம்மை நாமே காத்துக்கொள்ளுவோம்

## உலகின் மிக வேகமான 1TB microSD கார்ட் உருவாக்கம்



உலகத்தரம் வாய்ந்த microSD கார்ட்களை உருவாக்கும் நிறுவனங்களுள் Western Digital உம் ஒன்றாகும். இந்நிறுவனம் தற்போது உலகிலேயே அதிக வேகமாக தகவல் பரிமாற்றம் செய்யக்கூடிய புதிய microSD கார்ட் ஒன்றினை உருவாக்கியுள்ளது. இதன்படி 1TB சேமிப்பு கொள்ளளவு உடைய குறித்த microSD கார்ட் ஆனது 160MB/s எனும் தரவு வாசிப்பு வேகத்தினையும், 90MB/s எனும் தரவுப் பதிப்பு வேகத்தினையும் கொண்டுள்ளது. இதன் விலையானது 450 அமெரிக்க டொலர்களாக காணப்படுகின்றது. இதேவேளை 512GB கொள்ளவுடைய மற்றுமொரு microSD கார்ட்டினையும் அறிமுகம் செய்யவுள்ளது. இதன் விலை 200 டொலர்கள் ஆகும். இதேபோன்று இந்த நிறுவனம் கடந்த வருடத்தில் 400GB சேமிப்பு நினைவகம் கொண்ட microSD கார்ட்டினை அறிமுகம் செய்து வைத்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

## அலர்ஜி ஏற்படுவதற்கான காரணங்களும் தீர்வுகளும்...!

அலர்ஜி அறிகுறிகள் ஒருவருக்கொருவர், நேரத்திற்கு நேரம் மாறுபடும். உதாரணமாக, ஒருவருக்கு ஒரு அலர்ஜிப் பொருள் மூக்கில் தும்மல், மூக்கடைப்பு, ஜலதோஷம், நமைச்சல், வீக்கம், அரிப்பு போன்றவற்றை ஏற்படுத்தும்.

அலர்ஜி ஏற்படுவதை தடுக்க:

சீரகத்தை வறுத்து பொடியாக்கி தினமும் தண்ணீரில் போட்டுக் காய்ச்சி குடித்து வருவதன் மூலம் அலர்ஜி ஏற்படுவதைத் தவிர்க்கலாம்.

எண்ணெயில் பொரித்து எடுக்கப்படும் பஜ்ஜி, போண்டா, பூரி ஆகியவற்றையும் தவிர்ப்பது நல்லது. பசலைக் கீரை சூப் குடிப்பதன் மூலம் உடலுக்கு தேவையான நோய் எதிர்ப்பு சக்தி கிடைப்பதால் அலர்ஜி போன்ற பிரச்சனைகளுக்கு தீர்வாக அமையும்.

புதினாவை வாரத்தில் 3 முறை உணவில் சேர்த்துக்கொள்வது அவசியம். மோரில் உப்பு கலந்து வெள்ளறிக்காயை சிறிய துண்டுகளாக வெட்டிப்போட்டு சாப்பிடுவதன் மூலம் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கலாம்.

## சருமத்தின் இறந்த செல்களை நீக்கும் அழகு குறிப்புகள்...!



சருமத்தின் இறந்த செல்களை நீக்குவதற்கு ஃபேஷியல் செய்து கொள்ளலாம். நமது தோலுக்கு தகுந்த மாதிரியான பொருட்களை தேர்ந்தெடுத்து பயன்படுத்த வேண்டும்.

கிளன்சிங்: காய்ச்சாத பால் எடுத்து அதனுடன் கிளிசரின் பத்து சொட்டு, எலுமிச்சைச் சாறு ஐந்து சொட்டு கலந்து அதில் பஞ்சை நனைத்து முகம், கழுத்து மற்றும் கைகள் என அழுந்தி துடைக்க வேண்டும். இது ஓர் எளிமையான சிறந்த கிளன்சிங் முறை.

ஸ்க்ரப்: நன்கு பழுத்த பப்பாளிப்பழம் அல்லது அன்னாசிப்பழம் அல்லது ஸ்ட்ராபெர்ரிப் பழத்தை மிக்ஸியில் விட்டு தண்ணீர் விடாமல் அரைத்து அதனுடன் இரண்டு சிட்டிகை பட்டைப் பொடி, கால் ஸ்பூன் சர்க்கரை கலந்து அந்தக் கலவையை முகம், கழுத்து, கை போன்ற இடங்களில் வட்டவட்டமாகத் தேய்க்க வேண்டும். இதனால் நம் உடம்பில் இருக்கும் இறந்த செல்கள் நீங்கும்.

ஃபேஸ் பேக்: முகப்பொலிவைக் கூட்டுவதற்காக முகம் மற்றும் கழுத்திற்கு வாரம் ஒரு முறை ஃபேஸ் பேக் போடலாம். வீட்டிலேயே எளிமையாக ஃபேஸ் பேக் தயாரிக்கலாம். அதனை பன்னீருடன் கலந்து முகம், கழுத்துப் போன்ற பகுதிகளில் தேய்த்து 15 நிமிடங்கள் ஊற வைக்க வேண்டும். அதன் பிறகு கழுவ வேண்டும். இந்த ஃபேஸ்பேக்கை பயன்படுத்த முகச்சுருக்கங்கள் குறையும். இப்படி எளிமையான முறையில் நம் அழகை பாதுகாக்கலாம்.

## வீட்டில் உள்ள இந்த பொருட்களை வைத்து நோய்களுக்கான தீர்வு....!



நோய் வந்ததும் மருத்துவரிடம் ஓடாமல், வீட்டில் உள்ள 50 பொருட்களை கொண்டு குணம் பெறலாம். இதோ உங்களுக்கான வீட்டு மருத்துவம் படித்து பயன்பெறுங்கள். தேங்காய் எண்ணையில் கற்பூரம் சேர்த்து நன்கு சுடவைத்து ஆர வைத்து நெஞ்சில் தடவ சளி குணமாகும்.

ஐந்தாறு துளசி இலைகளும் ஒரு சிறு துண்டு சுக்கு, 2 லவங்கம், சேர்த்து நன்கு அரைத்து நெற்றியில் பற்றாகப் போட்டால் தலைவலி குணமாகும்.

சுக்கு, பால் மிளகு, திப்பிலி, ஏலரிசி ஆகியவற்றை வறுத்து பொடி செய்து தேனில் கலந்து சாப்பிட தொண்டை கரகரப்பு குணமாகும்.

ஒரு டம்ளர் தண்ணீரில் கருவேப்பிலை, இஞ்சி, சீரகம், மூன்றையும் கொதிக்க வைத்து ஆறவைத்து வடிகட்டி குடிக்க அஜீரணம் சரியாகும். அல்லது கறிவேப்பிலை, சுக்கு, சீரகம், ஓமம் சேர்த்து துவையல் அரைத்து சாப்பிட்டால் அஜீரணம் சரியாகும். அல்லது வெற்றிலை, 4 மிளகு இவற்றை மென்று தின்றால் அஜீரணக் கோளாறு சரியாகும்.

நெல்லிக்காய் இடித்து சாறு பிழிந்து, தேன் சேர்த்து சாப்பிட்டால் தொடர் விக்கல் தீரும். சீரகத்தை நீரிலிட்டு கொதிக்க வைத்து,அந்த சீரக நீரைக் குடித்து வர நன்கு ஜ"ரணமாவதோடு, உடல் குளிர்ச்சியடையும். அல்லது 1 தேக்கரண்டி இஞ்சிச் சாறுடன், சிறிது தேன் கலந்து பருகினால் ஜீரணசக்தி அதிகரிக்கும்.

வெந்தயத்தை மட்டும் ஊற வைத்து நன்கு அரைத்து தலையின் முடி வேர்க் கால்களில் தடவி வைத்து நன்கு ஊறியபின் தலைமுடியை அலசினால் முடி நன்கு வளருவதுடன் கண் எரிச்சல், உடல் சூடு தணியும்.

வெந்தயத்தை நெய்யில் வறுத்து பொடி செய்து மோரில் குடிக்க வயிற்று வலி நீங்கும்.

கமலா ஆரஞ்சு தோலை வெயிலில் காயவைத்து பொடி செய்து தினமும் சோப்புக்கு பதிலாக உடம்பில் தேய்த்து குளித்து வர சரும நோய் குணமாகும்.

ஒரு துண்டு சுக்கை தோல் நீக்கி அரை லிட்டர் நீரில் போட்டு சுண்டக் காய்ச்சி, பால், சர்க்கரை சேர்த்துக் காலை, மாலை சாப்பிட்டு வர மூக்கடைப்பு விரைவில் நீங்கும். வேப்பம்பூவை உலர்த்தி தூளாக வெந்நீரில் உட்கொள்வதினால் வாயுதொல்லை நீங்கும். ஆறாத வயிற்றுப்புண் நீங்கும்.

Start

Finish

## 7-வித்தியாசங்கள்





# மரண அறிவித்தல்



## ஓவியர் கருணா வின்சென்ற்

பிறப்பு : 11-01-1969 இறப்பு : 22-02-2019

யாழ். கரவெட்டியை பிறப்பிடமாகவும் கனடாவை வதிவிடமாகவும் கொண்ட ஓவியர் கருணா அவர்கள் பெப்பிரவரி 22, 2019 வெள்ளிக்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார்.

அன்னார் காலஞ்சென்ற வின்சென்ற் சின்னப்பு (இளைப்பாறிய தலைமை ஆசிரியர்), நெஜினா வின்சென்ற் (இளைப்பாறிய ஆசிரியை) ஆகியோரின் அன்பு மகனும், மரிய கருணாகரி ஜீவகுமாரின் பாசமிகு சகோதரரும், ஜீவகுமார் கிறிஸ்ரோப்பரின் அன்பு மைத்துனரும், பிரியா - குமணா, சிந்தியா - நிசாந்தன் ஆகியோரின் அன்பு மாமனாரும்.
திரு. திருமதி மரியநாயகம் (ஓவியர்), காலஞ்சென்ற திரு. திருமதி செலஸ்ரின், காலஞ்சென்ற திரேசா – கிறிஸ்ரோப்பரின் அன்பு மருமகனும் ஆவார்.

அன்னாரின் இறுதி வணக்க நிகழ்வு

01-03-2019 வெள்ளிக்கிழமை பிற்பகல் 5:00 மணி தொடக்கம் 9:00 மணி வரையிலும்

02-03-2019 சனிக்கிழமை காலை 8:00 மணி தொடக்கம் 9:30 மணி வரையிலும்

Chapel Ridge Funeral Home & Cremation Centre
(8911 Woodbine Ave Markham ON L3R 5G1) இல் நடைபெற்று.

காலை 10:00 மணி தொடக்கம் 14 Highgate Drive Markham இல் அமைந்துள்ள St Thomas the Apostle Roman Catholic Church ,ல் திருப்பலி ஒப்புக்கொடுக்கப்பட்டதன் பின்னர் திருவுடல் நல்லடக்கத்துக்காக 7777 Steels Ave East Markham இலுள்ள Christ the King Catholic Cemetery க்கு எடுத்துச்செல்லப்படும்.

தொடர்புகளுக்கு:
ஜீவகுமார்: (வீடு) 416 773 1379, (செல்லிடப்பேசி) 416 420 7845.
டிலிப்குமார் : 416 857 6406.



# கண்ணீர் அஞ்சலி




ஓவியர் கருணா

தமிழின் தொன்மைகளையும்
தமிழர்களின் வரலாற்றையும்
ஈழம்சார் இன்ப துன்பங்களையும்
தூரிகை கொண்டு ஆவணம் செய்த
தொலைநோக்குச் சிந்தனையொன்று
தொலைதூரம் பயணித்தது...

வர்ணங்களில் கதை சொல்லி
வார்த்தைகளுக்கு உருவம் தந்து
காத்திரக் கிறுக்கல்களால் - பல
மனங்களில் படர்ந்தவன்
புகைப்படமாய் இன்றெம்முன்...

கனடிய ஈழத்தமிழ் சமுதாயத்தின்
விரல்கள் கொண்டு
எண்ணிடக்கூடிய வித்தகர்களில்
கருணா அண்ணன் என்றும்
கம்பீரமாக வீற்றிருப்பார்...

விடைகொடுப்போம்...



- தேடிப்பார் குழுமம்

## 'தல 59'-ல் இணைந்த பிரபல குணச்சித்திர நடிகர்



நடிகர் அஜித் நடித்து வரும் 'தல 59' திரைப்படத்தில் முக்கிய கதாபாத்திரத்தில் பிரபல குணச்சித்திர நடிகர் டெல்லி கணேஷ் நடிக்கவுள்ளார். அஜித் நடிப்பில் பொங்கலுக்கு வெளியான 'விஸ்வாசம்' திரைப்படம் 50 நாட்களை கடந்து வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கிறது. இப்படத்தை தொடர்ந்து ஹெஷ். வினோத் இயக்கத்தில் உருவாகி வரும் 'தல 59' திரைப்படத்தில் அஜித் நடித்து வருகிறார். மறைந்த நடிகை ஸ்ரீதேவியின் கணவர் போனி கபூர் தயாரிப்பில் உருவாகும் இப்படம், ஹிந்தியில் அமிதாப் பச்சன் நடித்த 'பிங்க்' திரைப்படத்தின் அதிகாரப்பூர்வ ரீமேக்காகும். இப்படத்தின் ஷூட்டிங் தற்போது விறுவிறுப்பாக ஹைதராபாத்தில் உள்ள ராமோஜி ராவ் ஃபிலிம் சிட்டியில் நடைபெற்று வருகிறது. இப்படத்தில் அஜித்துடன் வித்யா பாலன், ஷ்ரத்தா ஸ்ரீநாத், அபிராமி வெங்கடாச்சலம், ஆண்ட்ரியா தாரியங், ரங்கராஜ் பாண்டே, ஆதிக் ரவிச்சந்திரன், அர்ஜுன் சிதம்பரம், சுஜித், அஸ்வின் ராவ் உள்ளிட்ட பலர் நடிக்கின்றனர். இந்நிலையில், புதிதாக முக்கிய கதாபாத்திரம் ஒன்றில் நடிக்க நடிகர் டெல்லி கணேஷ் ஒப்பந்தமாகியுள்ளார். தற்போது ஹைதராபாத்தில் நடைபெற்று வரும் 'தல 59' ஷூட்டிங்கில் நடிகர் டெல்லி கணேஷ் பிசியாக நடித்து வருகிறார்.ஏற்கனவே அஜித் நடித்த 'தொடரும்', 'ஜனா' உள்ளிட்ட திரைப்படங்களில் டெல்லி கணேஷ் நடித்துள்ளார். யுவன் ஷங்கர் ராஜா இசையமைக்கும் இப்படத்தை அஜித்தின் பிறந்த நாளான மே.1ம் தேதியில் ரிலீஸ் செய்ய படக்குழு திட்டமிட்டுள்ளது.

## ஜெயம் ரவியின் நீண்டநாள் கனவு நிறைவேறியது



ஜெயம் ரவி ஸ்கிரீன் சீன் நிறுவனம் தயாரிக்கும் 3 படங்களில் நடிக்க ஒப்பந்தம் செய்திருப்பதாக டுவிட்டர் பக்கத்தில் தெரிவித்திருந்தார். குறிப்பிட்டஒரு நிறுவனத்தின் தயாரிப்பில் மூன்று படங்களில் ஜெயம்ரவி நடிக்க ஒப்புக்கொள்ள காரணம் என்னவாக இருக்கும் என்ற கேள்வி திரையுலகில் அனைவரிடமும் எழுந்தது. சென்னை நகரில் முக்கிய பிரமுகர்கள் வசிக்கும் பகுதியாக போயஸ் கார்டன் பகுதி இருந்து வருகிறது. இப்பகுதியில் வீடு விலைக்கு வாங்க வேண்டும் என்பது ஜெயம் ரவியின் நீண்ட நாள் கனவு என்கின்றனர். நிறுவனத்திற்கு சொந்தமாக சென்னை போயஸ் கார்டனில் சுமார் 20 கோடி மதிப்பில் ஒரு தனிவீடு இருக்கிறதாம். அந்த வீட்டை ஜெயம்ரவி வாங்க முயற்சித்த போது பணத்திற்கு பதிலாக தங்கள் நிறுவனம் தயாரிக்கும் படத்தில் நடிக்க கால்ஷீட் கொடுத்தால் வீட்டை தருவதாக கூறியதால் மூன்று படங்களில் நடிக்க ஒப்புக் கொண்டிருக்கிறார் என்கிறார்கள்.

## எனக்கும் ஒஸ்காருக்கான கதவு திறக்கும்!



2019 ஆம் ஆண்டின் ஒஸ்கார் விருதுகள் அறிவிக்கப்பட்டது. அந்தவகையில், 'கிரீன் புக்', 'ரோமா', 'பிளக் பந்தர்' ஆகிய திரைப்படங்கள் ஒஸ்கார் விருதுகளைப் பெற்றுள்ளன. இந்நிலையில் இயக்குநர் விக்னேஷ் சிவன் தனது டுவிட்டர் பக்கத்தில் தனக்கும் ஒரு நாள் ஒஸ்கார் கிடைக்கும் என நம்பிக்கை வெளியிட்டுள்ளார்.




## தென்ஆப்பிரிக்க மண்ணில் முதல்முறையாக சரித்திரம் படைத்த இலங்கை அணி..!



இலங்கை - தென்ஆப்பிரிக்கா அணிகள் இடையிலான 2-வது மற்றும் கடைசி டெஸ்ட் கிரிக்கெட் போட்டி போர்ட் எலிசபெத்தில் கடந்த 21-ந்தேதி தொடங்கியது. இதில் முதல் இன்னிங்சில் முறையே தென்ஆப்பிரிக்கா 222 ரன்களும், இலங்கை 154 ரன்களும் எடுத்தன. 68 ரன்கள் முன்னிலையுடன் 2-வது இன்னிங்சை விளையாடிய தென்ஆப்பிரிக்கா வெறும் 128 ரன்னில் சுருண்டது. இதன் மூலம் இலங்கை அணிக்கு 197 ரன்கள் இலக்காக நிர்ணயிக்கப்பட்டது. 2-வது இன்னிங்சில் 45.4 ஓவர்களில் 2 விக்கெட்டுக்கு 197 ரன்கள் சேர்த்து 8 விக்கெட் வித்தியாசத்தில் அபார வெற்றி பெற்றது.

இந்த வெற்றியின் மூலம் டெஸ்ட் தொடரை இலங்கை அணி 2-0 என்ற கணக்கில் கைப்பற்றி புதிய சகாப்தம் படைத்தது. ஏற்கனவே முதலாவது டெஸ்டில் ஒரு விக்கெட் வித்தியாசத்தில் இலங்கை திரில் வெற்றி கண்டிருந்தது. தென்ஆப்பிரிக்க மண்ணில், ஆசிய கண்டத்தை சேர்ந்த ஒரு அணி டெஸ்ட் தொடரை வெல்வது இதுவே முதல் முறையாகும். மேலும், தென்ஆப்பிரிக்காவில் டெஸ்ட் தொடரை ருசித்த 3-வது வெளிநாட்டு அணி என்ற சாதனை பட்டியலிலும் இலங்கை இணைந்தது. ஏற்கனவே ஆஸ்திரேலியா மற்றும் இங்கிலாந்து இங்கு சாதித்து இருக்கிறது.

ஆஸ்திரேலியாவில் டெஸ்ட் தொடரை 0-2 என்ற கணக்கில் பறி கொடுத்து துவண்டு போன இலங்கை அணி புதிய கேப்டன் கருணாரத்னேவின் தலைமையில் தென்ஆப்பிரிக்காவுக்கு பயணித்தது. புயல்வேகப் பந்து வீச்சாளர்களை கொண்ட தென்ஆப்பிரிக்காவிடம் அதுவும் அவர்களது சொந்த மண்ணில் இலங்கை தாக்குப்பிடிப்பது கடினம் என்றே கூறப்பட்டது. ஆனால் போதிய அனுபவம் இல்லாத இலங்கை அணி, தென்ஆப்பிரிக்காவுக்கு ஒட்டுமொத்தமாக தண்ணி காட்டி விட்டது.

உள்ளரில் தொடர்ச்சியாக 7 டெஸ்ட் தொடர்களை வென்று இருந்த தென்ஆப்பிரிக்காவின் வீறுநடையும் முடிவுக்கு வந்தது. இந்த தோல்வியின் மூலம் தரவரிசையில் 2-வது இடத்தில் இருந்த தென்ஆப்பிரிக்க அணி 3-வது இடத்துக்கு சரிந்தது.

அடுத்து இவ்விரு அணிகள் இடையே 5 போட்டிகள் கொண்ட ஒரு நாள் கிரிக்கெட் தொடர் நடத்தப்படுகிறது. முதலாவது ஒரு நாள் போட்டி வருகிற 3-ந்தேதி ஜோகன்னஸ்பர்க்கில் நடக்கிறது.

## ISSF World Cup 2019 உலகக் கோப்பை துப்பாக்கிச் சுடுதல் போட்டி இந்தியாவுக்கு முதல் தங்கம்



2019ஆம் ஆண்டுக்கான துப்பாக்கிச் சுடுதல் போட்டியில் இந்திய வீராங்கனை இந்தியாவின் முதல் தங்கப் பதக்கத்தை வென்றுள்ளார். உலகக் கோப்பை துப்பாக்கிச் சுடுதல் போட்டி டெல்லியில் நடைபெற்று வருகிறது. பிப்ரவரி 20ஆம் தேதி தொடங்கிய இப்போட்டி பிப்ரவரி 28ஆம் தேதி வரை நடக்கிறது. இதில் இன்று நடைபெற்ற பெண்களுக்கான 10மீட்டர் ஏர் ரைபிள் பிரிவு இறுதிப் போட்டியில் இந்திய வீராங்கனை அபுர்வ்வி சந்தெலா பங்கேற்றார்.

## கடந்து சென்ற நிகழ்வுகளின் தொகுப்புகள்

Oruththi - A Tamil Movie Premiere.



Jarvis Kalaiyamutham-2019



கனடாத் தமிழர் தகவல் இதழின் 28வது ஆண்டு விருது விழா - 2019




"Nethra" Movie Premiere @ Toronto



TAMIL'S PAGE
தேடிப்பார் கொம்
Thedipaar.com

28th FEBRUARY 2019
DOWNLOAD OUR APPS


Anuthaapam.com



Pasi247.com



Thedipaaar App




பாகிஸ்தானில் பிடிபட்ட இந்திய விமானி கமாண்டர் அபினந்தன்


toronto-வில் கடும் பனிப்பொழிவு


High way-400 தொடர் வாகன விபத்து


வலிந்து காணாமல் ஆக்கப்பட்ட தங்களின் உறவுகளுக்கு நீதியை பெற்றுத்தா எனக் கதறி சர்வதேசத்திடமும், அரசிடமும் நீதி கோரி கண்ணீரால் நனைந்தது கிளிநொச்சி...


வியட்நாமில் வடகொரியா அமெரிக்க ஜனாதிபதிகள்


அனிமேஷன் குறும்படமான Bao என்ற படத்திற்காக தனது முதல் ஒஸ்கார் விருதை பெற்றுள்ளார்



